# அருள்

முருகா சரணம்

7/72





அம்பத்தூர் ஸ்ரீ புவனேச்வரி பீடம்
ஸ்ரீ மௌன ஸ்வாமிகள்






தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ]  பரிதாவி  ஆடி  (16-7-72)  [கருணை 10

வயலூர் வள்ளல் தோத்திரங்கள்

## ஆதிநாதர்

வித்தின்றி விளைவிக்கும் விழுப்பொருளாம் வயலூர் வாழ்
வித்தகனை ஆதியனை விரும்பி அன்பாய்ச்
சித்தரெல்லாம் பணிந் தேத்தும் செஞ்சுடர் நற்சடயானைச்
சித்தமது தானென்றித் தேவர் போற்ற
பத்தரெல்லாம் ஞானதீர்த்தப் புனலாடிப் பன்னாளும்
புலனென்றித் தொழுதிடவே புகுந்த பேருய்
அத்தனென வீற்றிருக்கும் ஆதிநாதர் அருளோடும்
அரும்பொருளும் தாம் வழங்கப் பெறுவார் தாமே

## ஆதிநாயகி

வலம்வந்தார்க் கருள்சுரக்கும் வயலூரெம் பதியதனில்
சலம்வந்த சடைமுடியான் இடங்கொண்ட தனிப்பாவை
கலங்கவிழ்ந்த நிலைகொண்டு கதியொன்றும் அறியாதே
அலம்வந்தே அரற்றுகிறேன் ஆதிநாயகி அருளுகவே.

—இயற்றியவர் பசிப்பிணி மருத்துவர்
உறையூர் மு. ஆ. அருணாசலமுதலியார் அவர்கள்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87,

● திருவாங்கூர் மகாராஜா பழநி ஸ்ரீதண்டாயுதபாணி ஸ்வாமிக்கு சாத்துவதற்கு பல ஆயிரங்கள் மதிப்புள்ள சொக்கத் தங்கத்தில் செய்த தங்கவேல் ஒன்று வைத்தார். அந்த தங்கவேல் செய்து 25 வருடங்களாகிறது. இதுவரை சுவாமி உத்தரவு கிடைக்காமல் இருந்ததாம். அண்மையில் சுவாமி உத்தரவு கிடைத்ததும் மகாராஜாவின் காரியதரிசி பழநி வந்து தேவஸ்தான நிர்வாக அதிகாரிகளிடம் அந்த தங்கவேலை ஒப்படைத்து சுவாமிக்குச் சாத்தும்படி சொல்லிவிட்டுப் போனார்.

● பழநி தண்டாயுதபாணி சுவாமி கோவில் மலையின் மேல் காபி ஓட்டல் ஒன்று இருக்கிறது. இந்த ஓட்டலில் குழந்தைக்கு பால் வேண்டும் என்று கேட்டால் காசு வாங்காமல் கப் நிறைய பால் தருகிறார்கள். ஒருநாளைக்கு எத்தனை குழந்தைகளுக்கு பால்வேண்டும் என்று கேட்டாலும் முகம் கோணாமல் சந்தோஷத்துடன் இலவசமாகவே பால் சப்ளை செய்கிறார்கள். இந்த பால் சப்ளை கடந்த 35 ஆண்டு காலமாகவே நடந்து வருகிறதாம்.

● ஆந்திராவில் அதிக வருமானம் உள்ள கோவில் திருப்பதி ஏழுமலையான் கோவில். தமிழ் நாட்டில் பழநி ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி கோவில். கேரளாவில் குருவாயூரப்பன் கோவில். மைசூரில் ஸ்ரீ சாமுண்டீஸ்வரி கோவில்.

● தமிழ் நாட்டிலே அதிக வருமானம் உள்ள கோவில் பழநி தண்டாயுதபாணி ஸ்வாமி கோவில் ஒன்றுதான். இதன் சென்ற வருட வருமானம் ரூபாய் 52 லட்சம். ஆனால் திருப்பதி ஏழுமலையானின் சென்ற ஒரு மாத வருமானம் மட்டும் 46 லட்சம் ரூபாய் ஆகும்.

● மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் 154 அடி உயரமுள்ள மேலக் கோபுரம்தான் மதுரைக்கு வருபவர்கள் கண்ணில் முதலில் தென்படும்.

● மதுரை நகரமும் கோயிலும் 3600 ஆண்டுகளுக்கு முற்பட்டவை. ஏழாம் நூற்றாண்டில் சுவாமி கோவிலும் உட்பிரகாரமும் மட்டுமே இருந்தது.

● மதுரை மீனாட்சி அம்மனுக்கு தனியாக கோவில் அமைத்தது 12ஆம் நூற்றாண்டில் மதுரையை ஆண்ட சடையவர்மன் குலசேகர பாண்டியன் என்று சொல்வர்.

● இராமேஸ்வரம் கோயிலுக்குள் பல இடங்களில் 22 தீர்த்தங்கள் (பெரும்பாலும் கிணறுகள்) இருக்கின்றன. யாத்ரிகர்கள் தாங்களே கயிறும் பாத்திரமும் கொண்டுவந்து தண்ணீர் இழுத்துக் குளிக்க வேண்டும். குளித்த நீர் கிணற்றுக்குள் போக விடக்கூடாது. தீர்த்தங்களில் மருந்துச் சத்துப் பொருள்களுடன் புனிதத் தன்மையும் கலந்திருக்கிறது.

● மதுரை கோயிலை 1877ல் ஏழு கோயில் நகரத்தார் ஒரு பெருந் திருப்பணி நடத்தினர். இந்தத் திருப்பணியின்போது கம்பத்தடி மண்டபத்திலுள்ள அற்புத சிற்பங்கள் தாங்கிய எட்டுத் தூண்களைக் கட்டி முடித்தார்கள். மொட்டைக் கோபுரத்தையும் செப்பனிட்டனர்.

● சைவ சமயக் குரவர்கள் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வர். முதல் மூவர் தேவாரத்தை அருளிச் செய்தனர். மாணிக்க வாசகர் திருவாசகத்தை அருளிச் செய்தார்.

● இராமேஸ்வரம்என்பது இராமனுல் பிரதிஷ்டைசெய்யப்பெற்ற ஈசுவரன் எழுந்தருளியுள்ள புனித ஸ்தலம். மூலஸ்தான மூர்த்தியை இராமேஸ்வரர், இராமலிங்கர், இராமநாதர் என்று பலவாருகச் சொல்வார்கள்.

● பழநி மலைமேல் தங்க ரதத்தில் சுவாமி புறப்பாடு செய்ய விரும்புவர்கள் அதற்குக் கட்டணம் ரூபாய் 750 செலுத்த வேண்டும். அந்தத் தொகைக்கு எக்ஸ்கியூட்டிவ் ஆபீஸர் ஸ்ரீ தண்டாயுதபாணி தேவஸ்தானம் பழநி என்னும் முகவரிக்கு பாங்கியில் டிருப்ட் வாங்கி 15 நாட்களுக்கு முன்பாக அனுப்பித் தங்களது பெயரைப் பதிவு செய்து கொள்ளலாம்.

● பழநிக்கு வரும் யாத்ரீகர்கள் பார்க்க வேண்டிய இடம் திருவாவினன் குடிக் கோவில், ஸ்ரீ பெரியநாயகி அம்மன்கோயில், ஸ்ரீ பெரியாவுடையார் கோவில், ஷண்முக நதி, சரவணப்பொய்கை ஸ்ரீ லெட்சுமி நாராயணப் பெருமாள் கோவில்.

● மதுரை அம்மன் கோபுரம் கட்டியவர் காளத்திநாத முதலியார். தளவாய் அரியநாத முதலியாரின் குமாரர். கி. பி. 1570 ல் கட்டப்பட்டது. அம்மன் கோபுரம் உயரம் 117 அடி. அடித்தளம் நீளம் 78 அடி. அடித்தளம் அகலம் 38 அடி. மொத்தம் சுதைகள் 730

● இராமேஸ்வரம் கோவிலில் தினசரி ஆறுகால பூஜைகள் நடக்கின்றன. காலை 5 மணிக்கு திருவனந்தல் (அபிஷேகத்துடன்) காலை 7 மணிக்கு உதயகாலம். காலை 9 மணி — காலசந்தி. பகல் 12 மணிக்கு உச்சிக்காலம். மாலை 6 மணி சாயரட்சை. இரவு9மணிக்கு அர்த்த ஜாமம்.

● சைவம், வைணவம், சாக்தம், காணுபத்தியம், கௌமாரம், வைரவம் முதலியன இந்துமதத்தின் கிளை மதங்கள்.

● தலையில் மூன்று முறை குட்டிக் கொண்டு மூன்று தோப்புக் கரணம் போட்டு விக்கினங்களை அகற்றுமாறு வேண்டிக் கொண்டு விநாயகரை வணங்க வேண்டும்.

# பஜ கோவிந்தம்

## ஸ்ரீ ஆதிசங்கரர்

பகலும் இரவும் மாலையும் காலையும் பனிக்காலமும் இளவேனிற்காலமும் திரும்பித்திரும்பி வந்து கொண்டிருக்கின்றன. இவ்வாறு காலம் விளையாடுகிறது; வயது கழிகிறது; என்றாலும் காற்றுப்போல் வியாபித்திருக்கும் ஆசைமட்டும் மனிதனை விடுவதில்லை.

மதிமங்கியவனே! மரண சமயம் நெருங்கிய பொழுது இலக்கணச் சூத்திரம் உன்னை ஒரு பொழுகும் காப்பாற்றாது. ஆகையால் கோவிந்தனைச் சேவி, கோவிந்தனைச்சேவி, கோவிந்தனைச் சேவி.

எதுவரை பொருள் தேடுவதில் ஒருவன் பற்றுள்ளவனாயிருக்கிறானோ அதுவரை அவனுடைய சுற்றம் அவனிடம் ஆசைவைத்திருக்கும். நோயினால் உடல் தளர்ந்துபோன பின்பு அவன் உயிருடனிருந்தால் ஒருவரும் அவனுடைய சமாசாரத்தை விசாரிப்பதில்லை.

சடைதரித்தவனானாலும், மொட்டையடித்தவனானாலும், குடுமியைக் கத்தரித்தவனானாலும், காவித் துணியணிந்து பலவாறான வேஷம் பூண்டவனானாலும், மதிமங்கியவன் பார்த்தாலும் பார்க்காதவனேயாகிறான். பலவகைப் பட்ட வேஷமெல்லாம் வயிற்றுப் பிழைப்பாகவே முடிகிறது.

அங்கம் தளர்ந்து விட்டது, தலை நரைத்துவிட்டது, வாய் பல் இல்லாததாக ஆகிவிட்டது; கிழவன் கோலை ஊன்றிக்கொண்டு நடக்கிறான்; என்றாலும் அவனுடைய மாம்ஸ பிண்டத்தை ஆசைவிடவில்லை.

குழந்தையாயிருக்கும் பொழுது விளையாட்டில் பற்று; யௌவனத்தில் பருவப் பெண்ணிடம் பற்று; வயது முதிர்ந்தபொழுது கவலை; பரப்பிரம்மத்திடம் பற்றுக்கொண்டவன் எவனுமில்லை.

இறந்தால் மறுபடி பிறப்பு; பிறந்தால் மறுபடி இறப்பு; மறுபடியும் ஒரு தாய் வயிற்றில் முடங்குதல்; கரைகாணாததும் கடத்தற்கரியதுமான இவ்வாழ்க்கைக் கடலினின்று என்னைக் காத்தருளும், பகவானே!

பகலுக்குப் பின் பகலும் இரவுக்குப்பின் இரவும், பக்ஷங்களும் மாதங்களும், கோடைகாலமும் குளிர்காலமும், வருஷத்திற்குப் பின் வருஷமும் மாறாமல் வந்து போய்க் கொண்டிருக்கின்றன. வீண் ஆசைகளும் ஸங்கல்பங்களும் எவனையும் விட்டுப் போவதாயில்லை.

வயது கடந்தால் காமக்கிளர்ச்சி என்ன ஆகிறது? நீர்வற்றினால் குளம் என்ன ஆகிறது? பொருள் அழிந்தால் சுற்றம் என்ன ஆகிறது? உண்மை உணரப்பட்டால் ஸம்ஸாரம் என்னஆகிறது?

எவனால் பகவத்கீதை சிறதளவாவது படிக்கப்பட்டதோ, கங்கை நீர் ஒரு துளியாவது பருகப்பட்டதோ, முராரியான பகவானுடைய பூஜை ஒரு தடவையாவது செய்யப்பட்டதோ அவனுக்கு யமபயமில்லை.

○ உலகம் உள்ளவரை இராம பிரான் புகழும் அழியாது. இராமாயணமும் அழியாது.

○ தருமம் தான் கடைசியில் ஜெயிக்கும். அதருமம் அழியும் என்று காட்டப்படும் நீதி தான் மகாபாரதம். தருமத்தின் உருவமாக விளங்குபவன் தருமபுத்திரன். அதருமத்தின் உருவமாக விளங்குபவன் துரியோதனன். இந்த இருவருக்கும் இடையே கண்ணன் இருந்து தருமம் வெற்றி அடையத் துணை புரிகிருன். இதுதான் பாரதக் கதை.

○ முருகக் கடவுள் ஐப்பசி மாதம் வளர்பிறை சஷ்டியில் சூரசம்ஹாரம் புரிந்தார். அதஞல்தான் ஐப்பசி மாதத்தில் சுக்கிலபட்சத்து சஷ்டி அன்று விரதம்இருக்கிருர்கள். விழா நடத்துகிருர்கள்.

○ முருகனுடைய தலங்களில் தனிச்சிறப்புடையது திருத்தணிகை. நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப் படையால் ஐந்தாம்படைவீடாம் குன்று தோருடல் முதலாவதாக வைத்து எண்ணப்படும் தலையாய திருத்தலம். அருளாளர்களான அருணகிரியார். இராமலிங்க வள்ளலார், முத்துச்சாமி தீட்சிதர் ஆகியவர்களால் புகழ்ந்து பாடப்பட்டதுமான திருத்தலம் திருத்தணிகை.

○ பழநி யாண்டவர் மலை நிலப் பரப்புக்கு மேல் 450 அடிஉயரமுடையது. ஏறிச்செல்லும் படிகள் 697 ஆகும். பழநிக் குன்றினைச் சுற்றி அழகிய தொருகிரிப்பிரகாரம் உண்டு. அது சுமார் ஒன்றே கால் மைல் சுற்றளவு உடையதாகும்.

○ பழநி தேவஸ்தானத்துக்கு நன்செயில் 354 ஏக்கர் 67செ. நிலமும், புன்செயில் 426 ஏக்கர். 55செ. நிலமும் இருக்கின்றன. இவைகளிலிருந்து சுமாராக வருடம் ஒன்றுக்கு லட்ச ரூபாய் வருமானம் வருகிறது. இது தவிர கால்நடைகளும் மூன்று யானைகளும் இருக்கின்றன.

○ பிள்ளையாருக்கு சிதறுதேங்காய் உடைப்பதன் கருத்து நாம் செய்த குற்றங்கள் பாவங்களாக உருண்டுதிரண்டுஉருக்கொண்டு நிற்கிறதாக தேங்காயை பாவித்து அது பிள்ளையார் வணக்கத்தால் உடைந்து சிதறினது என்பதாகும்.

○ ரெயிலில் போகும் போது கூடக் கோபுரத்தைப் பார்க்க வேண்டும், கடவுள் சிந்தனை வரவேண்டும் என்பதற்காகத் தான் உயரமான கோபுரத்தை நம் முன்னோர்கள் கட்டினுர்கள்.

# வழிபாடு



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

தந்திக் கம்பியில் கரண்டு இருந்தாலும் பல்பு மூலமாகத்தான் வெளிச்சம் பெற முடியும். அதுபோல், கடவுள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஆலயத்தில் சிறந்து விளங்கும் திருவுருவத்தின் மூலம் அருள் பெறமுடியும்.

ஊரைச் சுற்றும் பழக்கம் உடையவன், வீட்டிலே தங்கமாட்டான். அதுபோல், வினைபிடித்தவன் கடவுள் பெயரைச் சொல்லமாட்டான்.

படியாதவனுக்கு டானா என்னும் எழுத்து கோடாகவும், படித்தவனுக்கு எழுத்தாகவும் தெரியும். அதுபோல், ஆலயத்தில் இருக்கும் உருவம் பக்தியுடையோனுக்குத் தெய்வமாகவும், பக்தியில்லாதவனுக்குக் கல்லாகவும் தோன்றுகிறது.

வைத்து மறந்த பொருளை, ஓடினாலும், பாடினாலும் எடுக்கமுடியாது. சிந்தனை செய்தால் ஞாபகத்திற்கு வரும். அதுபோல், படிப்பாலும், பணத்தாலும் கடவுளைக் காணமுடியாது. பக்தியினால்தான் காணலாம்.

முக்கியமான நிலையங்களுக்கு அஸ்திவாரக்கல் நாட்டும்போது, மந்திரியை வரவழைத்து அவருக்குத் தங்கக்கரண்டி கொடுப்பது ஏன்? அவரோடு தொடர்பு வைத்துக் கொள்ளத்தானே? அதுபோல் தியானம், பிரார்த்தனை செய்வதெல்லாம் கடவுளோடு தொடர்புவைத்துக்கொள்ளத்தான்.

உன் வீட்டில் மின்சாரக் கம்பிகள் பதியவைத்திருக்கின்றன. வீடுகளிலெல்லாம் விளக்குகள் எரிகின்றன. உன் வீட்டில் மட்டும் விளக்கு எரியவில்லை. காரணம் என்ன? மெயின்லயன் தொடர்பு அறுந்து விட்டது. அதுபோல், எல்லோரும் க்ஷேமமாக வாழ்கிறார்கள். நீ மட்டும் துன்புறும் காரணம் என்ன? இறைவனுக்கும் உனக்கும் உள்ள தொடர்பு இல்லை.

இவ்வுலகில் உள்ள கோர்ட்டில் பீஸ் அதிகம் கொடுத்து, வக்கீல் மூலம் நாம் செய்த குற்றத்தை மாற்றிவிடலாம். ஆனால், ஆண்டவனுக்கு முன்னே எந்த வக்கீலைக் கொண்டு போனாலும் செய்த பாவத்தை மறைக்க முடியாது.

நமக்கு உண்மையான உறவு கடவுள்தான். அதனாலேதான் குழந்தையைத் தாலாட்டும்போது 'ஆராரோ ஆரிவரோ!' என்று பாடுகிறார்கள்.

தூங்கும்போது கனவில் என்னவெல்லாமோ காண்கிறாயே; நீ வணங்கும் தெய்வத்தைக் கண்டதுண்டா? அல்லது கனவில் சுவாமி வரவேண்டுமென்று நினைத்ததாவது உண்டா?

வீட்டில் களவு போய்விட்டால் போலீசாருக்குத் தெரியப்படுத்து. அதுபோல், உனது துன்பம்தீர கடவுளுக்கு முறையோடு விண்ணப்பம் செய்.

கடவுளை நினைக்க நேரமில்லையே என்றால், பவுடர் பூச, தைலம் தடவ, பல் விளக்க எவ்வளவு நேரமாகிறது? பிரார்த்தனை செய்ய மட்டும் நேரமில்லையோ?

காலில் முள் ஒடிந்துவிட்டால் இன்னொரு முள் கொண்டு குத்தி மேலும் துன்பம் கொடுத்தால் தான் ஒடிந்த முள்ளை எடுக்க முடியும். பின்பு வலிதீரும். அதுபோல், நமது துன்பமாகிய வினைகள் தீர மேலும் மேலும் துன்பம் தருகிறார் கடவுள். ஆகவே மனம் கலங்காதே.

விளக்கெண்ணெய்யை மனம் விரும்பிக் குடித்தாலும், மனம் விரும்பாமல் குடித்தாலும், உள்ளேபோய் பேதியாகத்தான் செய்யும். அதுபோல், கடவுள் நாமத்தை அன்போடு சொன்னாலும், அன்பு இல்லாமல் சொன்னாலும் பலன் ஒன்றுதான்.

எத்தனைக் காகங்கள் கூடியிருந்தாலும் ஒரு கல்லின் முன் நிற்காது. எவ்வளவு இருள் இருந்தாலும் கதிரவனைக் கண்டவுடன் நீங்கிவிடும். அதுபோல், எத்தனைப்பாவங்கள் அறியாத காலத்தில் செய்திருந்தாலும் கடவுள் நாமத்தைச் சொன்னால் விலகிவிடும்.

புதுமனைவி மத்தியானம் கடும் வெயிலில் கதம்பம் மலர் கேட்டாலும் துன்பம் தெரிவதில்லை. அதுபோல், கடவுள் அருள்பெறவேண்டும் என்ற ஏக்கம் இருந்தால் பசி, தாகம், துன்பம் தெரியா.

ஊதியம் பெறுவதற்கு உடையணிகின்றீர்களே, ஆண்டவன் அருளைப்பெற என்ன செய்தீர்கள்?

குழந்தைக்கு அழுகையும் சிரிப்பையும் சொல்லிக் கொடுத்தது யார்? இறையருள் அல்லவா? அவனை இமைப்பொழுதும் மறவாமல் வழிபடு.

ரெடிமேடு கடையில் அவசரத்திற்கு வேண்டிய சட்டைகளும், பனியன்களும் வைத்திருக்கிறார்கள். அதுபோல், பசியைத் தீர்க்க அவசரத்திற்கு வேண்டிய பழவகைகள் ஆண்டவன் நமக்காகப் படைத்திருக்கிறான்.

அவசரமாகச் செய்ய வேண்டியவை ஜெபதபங்கள். ஏனென்றால் திடீர் என்று எமன் வந்துவிட்டால் என்ன செய்வது?

அதிகாரிகள் தயவுபெற ஆபீஸில் காத்து நிற்கிறீர்களல்லவா? அதுபோல், ஆண்டவன் தயவு பெற ஆலயத்திலும் காத்து நிற்க வேண்டாமா?

# வாழ்க்கையின் மேலான நோக்கம்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

வாழ்க்கையின் நோக்கம் சம்சாரத்தளையினின்று விடுதலையடைந்து பரம்பொருளை அடைவதே.

ஆத்ம ஞானம் ஒன்றே பிறவிப் பிணியைப் போக்க வல்லது. துக்கங்களை ஒழிக்கவல்லது.

முற்றிலும் தெய்வத் தன்மையடைவதே தான் மனிதனின் இலக்ஷியம்.

தெய்வீக சம்பத்துக்கள் யாவும் ஒருவனிடம் ஒருங்கே சேர்ந்து அமைந்திருக்க வேண்டும். இறைவன் அருளுக்குப் பாத்திரமாக அவன் தன்னைத் திருத்தி அமைத்துக் கொள்ளவும் வேண்டும். அப்பொழுது தான் அவன் உள்ளத்தில் திவ்ய ஒளி பிரகாசிக்கும்.

தெய்வீகம் நிறைந்த வாழ்க்கையேதான் உண்மையான, சாரமான, மேலாம் வாழ்க்கை. எனவே தெய்வீக வாழ்க்கையே மேற்கொள்.

வாழ்க்கையின் உனது முக்கிய' மேலாம்கடமை ஆத்ம ஞானம் பெறுவதே. ஏனைய கடமைகள் யாவும்இதற்குக் கீழ்பட்டவையே, உபயோக மற்றவையே.

ஆத்மீக சாதனைகள், அல்லது யோகப் பயிற்சிகள், அல்லது தியானம் - இவற்றின் இலக்ஷியம் ஆண்டவனை அடைவதே. எனவே இந்த இலக்ஷியத்தை மறந்து விடாதே.

அமர நிலையை அளிக்கும் ஆண்மீக மார்க்கமும், மன அடக்கத்திற்கு ஹேதுவான ஆத்மீக சாதனையும், ஜீவாத்மா – பரமாத்மா ஐக்கியத்தை ஏற்படுத்தும் சமாதியும் இனிமையானவையே.

துக்கங்களை முற்றிலும் புறக்கணிக்கவும் எல்லையற்ற ஆனந்

தத்தை அடையவும்தான் மனிதன் சதா பாடுபட்டுக் கொண்டிருக்கிறுன். இந்நோக்கத்துடன் தான் அவன் வாழ்க்கையில் ஒவ்வொரு காரியத்தையும் செய்கிறுன். எனினும் அவன் உலக வாழ்க்கையில் உண்மையானசுகத்தைக் காண்பதில்லே. சுகத்திற்குப் பதிலாக துக்கத்தையும் வெறுப்பையும்தான் அடைகிறுன். இவ் வெறுப்பேதான் அவனே இறைவன் பாலும் திருப்புகின்றது.

உலகப் பொருள்கள் அநித்தியம், துக்கத்தையே தருபவை. அவை ஒருக்காலும் நிரந்தர ஆனந்தத்தை அளிக்கா. எனவே அவற்றில் பற்றுவைக்காது அப்பற்றை இறைவன் பால் திருப்பு' அப்பொழுதுதான் உனக்கு நித்திய சாந்தியும், நிரந்தர ஆனந்தமும் ஏற்படும்.

உன் மனதை இறைவனிடம் திருப்பு. அப்பொழுது உனது சகதுக்கம் ஒழியும். ஜனன மரணம் நீங்கும். உனக்கு முக்தியும் கிட்டும்.

விஷய போகங்கள் கேடு விளேவிப்பவை. அவை ஒருக்காலும் நிரந்தர ஆனந்தத்தை அளிக்கா எனவே பொறிகளேப் புலன்களினின்று மீட்டி அவற்றை ஆண்டவனிடம் திருப்பு. அப்போழுது தான் உனக்கு நிரந்தர ஆனந்தம் கிட்டும்.

சுயேச்சையே ஹிந்துக்களுடைய ஆத்மீக சாதனேயின் மூல மந்திரம். சம்சாரத்தளேகளே அறுத்து எறிவதும், ஜனன மரணச் சுழலிலிருந்து விடுபடுவதுமே தான் சுயேச்சை.

இந்தியரின் பண்பாடு அத்யாத்மிகத்தையே மிகவும் அடிப்படையாகக் கொண்டது.

ஹிந்துக்களின் இலக்ஷியம் ஆண்டவனே அடைவதேதான்.

ஆத்மீகம் என்பது மனதைக் கட்டுப்படுத்தித் தெளிவுறுத்துவதாகும். மனிதனே தெய்வப்பெற்றியவனுக்குவதாகும்.

ஞானத்தின் உயரிய சிகரத்தை அடைவதே நம் நாட்டில் ஞானிகளுக்கும் முனிகளுக்கும் அத்தியந்தப் பிரியமாகவும் மேலாம் இலக்ஷியமாகவும் இருந்து வந்திருக்கிறது.

உனது இலக்ஷியத்தைப்பொறுத்தேதான் உனது வாழ்க்கை உருவாகின்றது. உனது இலக்ஷியம் மேன்மையானதாக இருந்தால் நீயும் மேன்மையடைவாய்.

கடவுள் எங்கும் உள்ளார். மூச்சிலும், எண்ணத்திலும், மனச்சாட்சியிலும், சப்தத்திலும், வர்ணத்திலும், உருவத்திலும், ருசியிலும், வாசனேயிலும், நக்ஷத்திரங்களிலும், பூக்களிலும், பஞ்ச பூதங்களிலும் அவர் வியாபகத்தை உணர்.

வேதங்களின் விதிப்படி இறைவனே வழிபட மனிதனுக்கு ஏற்பட்டுள்ள உரிமை அவனிடத்தில் இயற்கையாக உண்டானதேயொழிய கேவலம் பிறர் நிர்பந்தத்தினுல் அல்ல. சர்க்காரினுலோ சட்டத்தினுலோ ஏற்பட்டதுமல்ல.

பேரின்பம் உனக்குச் சொந்தமே. ஆத்ம சாம்ராட் ஆக உனக்கும் உரிமை உண்டு.

● பழநியாண்டவர் அபிஷேகத்திற்கு தேவஸ்தானத்திலேயே பன்னீர் விற்கப்படுகிறது. அதைத் தான் வாங்க வேண்டும். மற்ற பன்னீர் அனுமதிக்கப்படமாட்டாது.

● பழநியாண்டவர் சாத்துபடிக்கு துலுக்கு மல்லிகை என்ற செண்டு மல்லிகையும், வாசனை இல்லாத மற்றுமுள்ள புஷ்பங்களையும் அனுமதிக்க மாட்டார்கள்.

---



திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S.சித்தனாதன்சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொறித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# ஆதி சங்கரரும் ஜோதிமடமும்

வேதம் அனாதி, அதை அனுசரித்த வைதிக மதமும் அனாதி. அதையே ஸநாதன மதம் என்பர்.

காலப்போக்கில் வைதிக மதத்தை பின்பற்றியவர்களுக்குள் ஏற்பட்ட அறிவு குழப்பத்தில் பல விதமான எண்ணங்கள் தோன்றி வைதிக மதத்தின் தூய்மைக்கு களங்கம் ஏற்படுத்தினார்கள். கணாதர் மதம், புத்த மதம், காபாலிக மதம் என்று பலவித மதங்கள் தோன்றி மக்கள் பற்பல வழிகளில் ஈடுபட்டு உண்மை எது என்று உணர முடியாமல் தவித்தனர். இப்பால் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வித கலக்கம் மக்களிடையே ஏற்பட்டுவிட்டது,

பாரத தேச சரித்திரத்திலேயே இம்மாதிரி குழப்பங்கள் நேரும் போதெல்லாம் ஈசனே அவதரித்து சீர்படுத்தி விடுவார் என்கிற நம்பிக்கைக்கிணங்க வைதிக மதம் தழைத்தோங்க ஈசனே காலடி க்ஷேத்திரத்தில் சிவகுரு ஆர்யாம்பாள் என்கிற தம்பதிகளுக்கு ஒரு வைசாக சுத்த பஞ்சமியில் அவதரித்தார். இவருக்கு சங்கரன் என்கிற நாமம் சூட்டப்பட்டது. இவர் பிறந்த நான்காம் வருஷத்திலேயே தகப்பனார் காலமாக, தன் அன்னையின் போஷணையில் இருந்துவந்தார். தாயாரும் ஐந்தாவதுவயதில் சங்கரனுக்கு, ப்ரம்மோபதேசம் செய்வித்து, ஒருகுருவிடம் விதிப்படி அத்யயனம் செய்ய அனுப்பிவைத்தார்கள். சங்கரரும் சாஸ்திரத்தை அனுசரித்து உஞ்சவிருத்தி செய்து கொண்டு குருசுச்ருஷையுடன் அத்யயனம் செய்துகொண்டு வந்தார்.

பரம்பொருளே பாலனாய் அவதரித்து வைதிக தர்மத்தை நிலை நாட்ட வந்தவர் யாசகம் பண்ணியும் அத்யயனம் செய்துவந்தும் கருணையே மூர்த்திகரித்து வந்ததை வெளிப்படுத்திக்கொள்ளும் சந்தர்ப்பம் ஒன்று ஏற்பட்டது.

ஒரு ஏழைப் ப்ராஹ்மணன் வீட்டுக்கு முன்பு நின்று கொண்டு "பவதி பிக்ஷாம் தேஹி" என்று கேட்க அப்போது அந்தவீட்டிலுள்ளபெண்மணிதன் கணவரின் த்வா

தசிபாரணைக்கு வைத்திருந்த நெல்லிக்கனியைத் தவிர வேறு ஒன்றும் கொடுக்க இயலாத நிலைமையில் அந்த நெல்லிக்கனியையே அந்த பாலகனுக்கு இட்டாள். அந்தப் பெண்ணின் ஏழ்மை நிலையிலும் அவளுடைய நற்பண்பை கவனித்த சங்கரர் ஸ்ரீ தேவியைக் குறித்து "கனகதாராஸ்தவம்" என்கிற பாடல்களால்துதித்தார். லக்ஷ்மிதேவியும் மனமுவந்து ஸ்வர்ண மழை பொழியச் செய்தாள். அந்த அந்தண மாதின் வீடு முழுவதும் ஸ்வர்ணம் நிறைந்து ஏழ்மை அறவே ஒழிந்தது.

மற்றொருநாள் தன் தாயார் உடல் நலக் குறைவால் சற்று தூரத்திலுள்ள பூர்ணா நதிக்கு ஸ்நானம் செய்யப் போக முடியாமலிருந்தசமயம் சங்கரர் அந்த நதியைத் துதிக்க அந்நதியும் தன் போக்கை மாற்றிக்கொண்டு சங்கரர் வீட்டருகே ஓடிற்று.

ஒருநாள் சங்கரர் தன் தாயாருடன் பூர்ணா நதியில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கும் பொழுது ஒரு முதலை சங்கரரின் காலைக் கவ்விற்று. உடனே சங்கரரும் தன் நிலையை தன் தாயாரிடம் தெரிவித்து தான் முதலையிடமிருந்து விடுதலைபெற ஒரே வழி தான் உண்டு என்றும், தான் அப்பொழுதே சந்நியாசம் வாங்கிக் கொண்டுவிட்டால் முதலை தன்னை விட்டுவிடும் என்று சொன்னார். வேறுவழியின்றி, தாயாரும் சம்மதிக்க சங்கரரும் துறவற மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு நீரில் மூழ்க, முதலையும் சங்கரரை விட்டு விட்டது.

பிறகு தாயார் உத்தரவுடன் தக்க குருவைத் தேடி சங்கரர் வடக்கு நோக்கிப் புறப்பட்டார். நர்மதா நதிக்கரையில் ஒரு குகையில் தவமிருந்த கோவிந்த பகவத்பாதர் என்னும் முனிவரை அடைந்தார். நீ யார் என்று குரு கேட்க சங்கரர் தனது அத்வைத சித்தாந்த அடிப்படையில் பதில் கூறி, தான் கேவலம் தேகத்திற்கு அப்பாற்பட்ட சுத்த ஆத்மா என்று சொன்னார். அதைக்கேட்ட முனிவரும் கிரமமாக சங்கரருக்கு சந்நியாசம் அளித்து மகாவாக்கிய உபதேசமும் செய்து வைத்து சங்கரரை காசிக்குச் சென்று அத்வைதக் கொள்கையை பரப்புமாறு பணித்துவிட்டு தான் தவமியற்ற பத்ரிநாத் சென்றுவிட்டார்.

காசியில் சில சிஷ்யர்கள் சேர ஸ்ரீ சங்கராச்சாரியார் அந்த சிஷ்யர்களுக்கு வேதாந்த பாடம் சொல்லிக்கொண்டும் உபநிஷத்துக்கள், பகவத் கீதை, ப்ரம்ஹ சூத்ரம், ஆகிய ப்ரஸ்தானத்ரயத்திற்கும் அத்வைதக் கருத்துக்களைக் கொண்டு 'பாஷ்யம் இயற்றிக் கொண்டிருந்தார். ஒருநாள் சிஷ்யர்களுடன் கங்கையிலிருந்து திரும்பி வந்துகொண்டிருக்கையில் ஒரு புலையன் எதிர்ப்பட, சிஷ்யர்கள் அவனை அப்பால் விலகு என்று சொன்னார்கள். அப்புலையன் அவர்களை நோக்கி, "அன்னமயமான

உங்கள் தேகத்திலிருந்து என் அன்னமய தேகத்தை தூரப்போ என்று சொல்லுகிறீர்களா? அல்லது உங்கள் உள்ளிருக்கும் சைதன்யத்திலிருந்து என்னிடமிருக்கும் சைதன்யத்தை விலகச் சொல்லுகிறீர்களா? அன்னமயமெல்லாம் ஒரே ஸ்வரூபம். சைதன்யமும் ஒன்றேயாம். அதனுல் ஒன்றிலிருந்து அந்த ஒன்றையே விலகச் சொல்வதும் சரியல்லவே. கங்கை ஜலத்தில் உள்ள சூர்ய பிரதி பிம்பத்திற்கும், புலேயர் தெரு சாக்கடை ஜலத்தில் உள்ள சூர்ய பிரதி பிம்பத்திற்கும் வித்தியாசம் உண்டா? தங்கக்குடத்திலுள்ள வெட்ட வெளிக்கும் மண்குடத்திலுள்ள வெட்ட வெளிக்கும் வித்தியாசம்உண்டா என்று கேட்டான்.

உடனே ஆசார்யாள் எதிரிலிருப்பதுபுலேயனல்ல, ஈச்வரனே தன்னே சோதிக்க வந்திருக்கிறுர் என்றறிந்து "மனீஷா பஞ்சகம்" என்கிற ஐந்து சுலோகங்களால் அத்வைதத்தை விளக்கி அருளினுர். விழிப்புகனு, தூக்கம், இவைகளின் ஊடே ஒரு அறிவான வஸ்து இருந்து வருகிறது. அதுவே எறும்பு முதல் ப்ரம்மா வரை எல்லோரிடமும் இருக்கிறது. அதுவே ஆத்மா. அதை பார்க்க முடியாது. இந்த உண்மையை அநுபவரீதியாக உணர்ந்தவர் சண்டாளனுயினும் சரி, த்விஜயனுயினும் சரி அவனே என் குரு.

இது போன்ற 5 சுலோகங்களிலும் அத்வைதக் கொள்கையே ஐயந் திரிபு அற ஆசார்யாள் விளக்கினுர். புலேயன் ரூபத்தில் வந்த விச்வேசரும் தன் நிஜ ரூபத்தில் தர்சனம் கொடுத்து மறைந்தார்.

ஸ்ரீ ஆசார்யாள் சிருங்ககிரியிலிருக்கும் போது கிரி என்று ஒரு சிஷ்யன் இவரை அடைந்தார். இவருக்கு குரு சிச்ரூஷை செய்வதில் மிகவும் ஆர்வம். குருவிடம் பரம விச்வாசம். அதிகம் பேசுவதில்லே. அதனுல் அவரை அசடு என்று மற்ற சிஷ்யர்கள் மதித்தனர்.

ஒரு நாள் கிரி ஆசார்யாளின் துணிகளே துவைக்க வெளியிற் சென்றிருந்த சமயம், பாஷ்ய பாடம் கேட்க மற்ற சிஷ்யர்கள் கூடிவிட்டனர். ஆசார்யரோ கிரியின் வருகைக்காக காத்திருக்கலாம் என்றுர்.

அப்போது பத்மபாதர் கிரியின் ஸ்தானத்தில் இது இருக்கிறதே என்று பக்கத்து சுவற்றைக் காண்பிக்க, ஆசார்யாள் பத்மபாதர் கர்வத்தை அடக்கவும், கிரியின் குணத்தை பிரகடனப்படுத்தவும் திருவுளங்கொண்டு, நதிக்கரையில் உள்ள கிரிக்கு சர்வ வித்யையும் ஸ்புரிக்கும்படி அனுக்ரஹித்தார். என்ன ஆச்சர்யம்! சிறிது நேரத்திற்கெல்லாம் கிரி அங்கே வந்து தோடகவிருத்தத்தில் 180 ஸ்லோகங்களில் வேதாந்த தத்வத்தை விளக்கி அருளினுர். மற்ற சிஷ்யர்களும் குருவின் மகிமையையும் கிரியின் பெருமையையும் உணர்ந்த

னர். அதுமுதல் கிரி தோடகாசாரியார் என்று விளங்கலானர். அவர் செய்த நூல் "சுருதிஸாரஸமுத்தரணம்" என்பதாகும்.

"மாத்ரு கர்மா" ஆசார்யாளின் மாதாவின் அந்திய காலத்தில் அவர் தன் புத்ரனை நினைக்க ஆசார்யாரும் மாதாவின் விருப்பப்படி அவரிடம் போய் அவளை ஆசுவாசப்படுத்தி, அவள் சிவகணங்களைக் கண்டு பயந்ததால் வைஷ்ணவ தூதர்களைக்கொண்டு வைகுண்டத்திற்கு அனுப்பி வைத்தார். அவள் தேகத்தை தகனம் செய்ய காலடியில் ஒருவரும் உதவிக்கு வராததால் தானே தன் வீட்டுள் புறக்கடையில் தகனம் செய்தார்

மறுபடியும் சிஷ்யர்களுடன் பாரத தேசம் பூராவையும் திக்விஜயம் செய்துகொண்டு சிருங்ககிரியில் சாரதா பீடத்தை ஸ்தாபித்தது போலவே,

துவாரகையில் ஒரு மடத்தை நிறுவி அங்கு பத்ம பாதரையும்,

பூரி ஜகந்நாத்தில் ஒருமடத்தை நிறுவிஅங்கு ஹஸ்தாமலகரையும்,

பத்ரிநாத்தில்ஜோதிர்மடத்தை நிறுவி அங்கே கோடகாசாரியையும் பீடாதிபதிகளாக நியமித்து அத்வைதப் ப்ரசாரம் செய்யும்படி கட்டளையிட்டு தான் காஞ்சியில் காமகோடி பீடத்தில் சர்வக்ஞ பீடமேறி அநேக பக்தி துதிகளையும், பாஷ்யங்களையும் இயற்றி தன் 32-வது வயதில் ஸித்தியடைந்தார்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் ஏற்படுத்திய மடங்களில் உத்தராமநாய மடமாக ஜ்யோதிர்மடத்தை ஸ்தாபித்து அதற்கு அதிபதியாக கிரி என்ற தோடகாசார்யரை நியமித்தார்கள்.

இந்த பீடத்திற்கு ஜ்யோதிஷ் மதீபீடம் என்றும், க்ஷேத்ரம் பத்ரி என்றும், தீர்த்தம் அளக நந்தா என்றும் ஏற்பட்டிருக்கிறது.

இதில் ஆராதிக்கப்படும் தெய்வம் நாராயணர், சக்தி 'பூர்ணவதி' வேதம் அதர்வணம், மகாவாக்யம் அயமாத்மாப்ரஹ்மா.

இதில் பீடாதிபதிகளாக நியமிக்கப்படும் ஒவ்வொருவர் பெயருக்கும் கடைசியில் " கிரி " என்ற பட்டம் உண்டு.

இதில் 1800-ம் வருஷ வாக்கில் ஜோதிர்மடத்தில் ஸ்ரீ சிவரத்தின கிரி என்னும் மகான் பட்டத்தில் இருந்திருக்கிறார். அவர்களது சிஷ்ய

யர் தான், திருக்கோவிலூர் சமீபம் தபோவனத்தில் விளங்கிவரும் ஸ்ரீ ஞானனந்தகிரி ஸ்வாமிகள்

ஸ்ரீ ஸ்வாமிகள் பட்டத்திற்கு வந்தசிலவருடங்களுக்குள் தனக்கு பீடாதிபத்யம் வேண்டாமென்று ஸ்ரீ ஆனந்த கிரி என்பவரை பீடாபதியாக நியமித்துவிட்டு, காஷ்மீரில் தம்குரு சிவரத்தின கிரி ஸ்வாமிகள் ஸித்தியடைந்த இடத்திலிருந்து தான் யாத்திரைக்கு கிளம்பி பாரத தேசம், பர்மா, சிலோன் முதலிய தேசங்களிலும் இரண்டு தடவை ப்ரதக்ஷணமாக வந்து திருச்சி, கோவை ஜில்லாக்களில் சில காலம் தங்கிய பிறகு, சேலம் ஜில்லாவில் வேலநத்தத்திலும், தென்னுற்காடு ஜில்லாவில் சித்தலிங்க மடத்திலும் இருந்து தற்சமயம் திருக்கோவலூரை அடுத்த தென் பெண்ணை (தட்சிணபினுகினி) கரையில் "தபோவனம்" ஒன்று நிறுவி அங்கே வாஸம் செய்துகொண்டு, "ஜோதிர்மட அருள் ஜோதி" யாக அண்டிவரும் பக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்துகொண்டு வருகிறுர்கள்.



O உள்ளத்தில் கடவுள்உணர்ச்சி மலர்கிறபொழுதுதான் மக்கள் மக்களாக வாழ்கிருர்கள். இது இந்திய நாட்டுப் பண்பாடு. இதன் அடிப்படையில்தான் இந்நாட்டு சமய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

O தருமபுர ஆதீன ஆட்சியில் 27 திருக்கோயில்கள் எழிலுடன் இலங்குகின்றன. இவ்வாதீனம் ஆகமபாடசாலே அமைத்து வழி பாட்டை வளர்க்கிறது. தேவா ரப்பாடசாலே வாயிலாக சிவநெறி பரப்புகிறது. திக்கற்ற இந்துக் குழந்தைகளுக்குப் புகலிடம் அளித்துப் பேணி வளர்க்கிறது.

O சென்னே தியாகராய நகரி லுள்ள தருமை ஆதீன மடாலய தேவலாய சமயப் பிரசார நிலே யம் சென்னே அரசாங்க அந்நாள் முதலமைச்சர் கனம் ராஜாஜி அவர்களால் கட்டடம் 28-9-1953 திங்கட்கிழமை மாலே 5-30 மணிக் குத் திறந்து வைக்கப் பெற்றது.

O பெண்மணிகளுக்குத்திருமாங் கல்யம் எத்துணே முக்கியமோ, அத்துணே முக்கியமானது சைவர் கட்கு உருத்திராட்சம். உருத்திர மூர்த்தியின் கண்மணியினின் றுந் தோன்றியது உருத்திராட்சம்.

O விநாயகர், சிவபெருமான், உமாதேவியார், வீரபத்திரக் கட வுள், வைரவக் கடவுள், முருகக் கடவுள் முதலிய சிவமூர்த்திகட்கு விபூதியபிஷேகம் செய்தல் விதியா கும். தொடக்கத்தில் பஞ்சகவ்ய மும், முடிவில் திருநீறும் அபிஷே கம் செய்யவேண்டும்.

● திருப்புகழ், கந்தரனுபூதி, ஆழ்வார்களின் நாலாயிர திவ்ய பிரபந்தம்,பன்னிருதிருமுறைகள், சித்தர் பாடல்கள் எல்லாம் தெய் விகமான நூல்களே. ஆண்டவனே மனமுருகித் தமிழ்மொழியிலேயே தோத்திரம் செய்த நூல்கள் ஏரா ளம் உண்டு.

● பாரதத்தில் தெய்வீகப் பாடல்களான திருப்பாவை திரு வெம்பாவையை மலரச்செய்தவர் இளம் உள்ளங்களின் இதயத் தாமரையில் வீற்றிருப்பவர் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளே.

● கோயிலே வேகமாக வலம்வரு தல் கூடாது கர்ப்பிணிகள் நடப் பது போல் மெதுவாக வலம் வர வேண்டும் தாம்பூலம் தரித் துக்கொண்டு கோயிலுக்குச் செல் லக் கூடாது.

● தங்கள், தங்கள் சக்திக்கு ஏற் றபடி, நெய், எண்ணெய், இலுப்பை நெய் முதலியவற்றல் தீபங்களே ஏற்றிவைக்கலாம். "விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்நெறி ஞானமாகும்" என்பது அப்பர் அருள் வாக்கு.

● சிவலாய மூர்த்தி வழிபாடு களின்போது ஓதவேண்டியதோத் திரங்கள், வேத, ஆகம புராணங் களில் உள்ளவையாக இருக்க வேண்டும். அல்லது சைவ சமய

ஆசார்யார்கள் அருளிச் செய்த திருமுறைகளாகஇருக்கவேண்டும். அல்லது ஆதிசங்கரர் மற்றுமுள்ள ஆசார்ய புருஷர்கள், அருளாளர் கள் அருளிச்செய்தவையாக இருக் க வே ண் டு ம். செந்தமிழிலோ அல்லது சமஸ்கிருதத்திலோ இருக் கலாம்.

● நவீன சினிமா, நாடகமெட்டு களில் திருமுறைப் பாடல்களை அமைத்துப் பாடக்கூடாது இது அபசாரம். மயக்க அறிவுள்ள சாதாரண மக்களால் பாடப் பெற்ற பாடல்களை திருமுறைப் பாடலாகப் பாடக் கூடாது.

● 19ம் நூற்றுண்டில் ஜாதி வெறி சமயவெறி முதலிய பற்பல வெறிகள் மிகுந்து மக்கள் பூச லிட்டு நிலைகுலைந்து நின்ற போது அ ரு ட் பி ர கா ச வள்ளலார் தோன்றி திருவருட்பா என்ற தண்டமிழ் மழையைப் பொழிந்து உலகு உயிர்களை உய்வித்தனர்.

● விருகம்பாக்கத்தை அடுத் துள்ள ஆழ்வார் திருநகரிலுள்ள ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் ஆலயத் தில் உள்ள ஸ்ரீ சிந்தாமணி விநாய கருக்கு 2-7-72ல் பாலாலய கும் பாபிஷேகம் மிகச் சிறப்பாகநடை பெற்றது. ஆழ்வார் திருநகர் அண்மையில் ஏற்பட்டகுடியிருப்பு பகுதி. இப்போது சென்னையில் ஏற்படும் குடியிருப்பு பகுதிகளி லெல்லாம் விநாயகர் கோவில் இருக்கிறது. முதலில் விநாயகரை வைத்துத்தானே மற்றதெல்லாம் நடக்கவேண்டும்.

● ஏகநாயகன் உலகத்தைப் படைத்து, அளித்து அழிக்கக் கொ ண் ட மும்மூர்த்தங்களில் காத்தல் தொழிலைக் கொண்ட கடவுள் மகாவிஷ்ணு ஆவார்.

● மஹாவிஷ்ணு, கோயில்களில் நின்ற தி ரு க் கோ ல மா க வும், இருந்த திருக்கோலமாகவும் ஆதி சேஷசயனத் திருக்கோலமாகவும் வைத்து வணங்கப்படுகிறது.

● வடக்குப் பக்கமாவது, கிழக் குப் பக்கமாவது நின்று கொண்டு தரையில் விபூதி சிந்தாதபடி மூன்று விரல்களால் எடுத்து அண் ணாந்து சிவசிவ என்று சொல்லி சிவனைத் தியானித்துப் பூசுதல் வேண்டும்.

● பூஜை என்பதற்கு ஞானத் தையுண்டாக்கக் கூடிய சாதனம் என்று பொருள்.

● பூஜை செய்வதற்கு முன் ஆன்மசுத்தி, ஸ்நானசுத்தி, திர வியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்க சுத்தி ஆகிய பஞ்சசுத்திகளையும் செய்யவேண்டும்.

● பழநி மலைமேல் தங்கரதம் புறப்பாடுசெய்ய முன்பு 250ரூபா கட்டணம் வைத்திருந்தார்கள். மாதம் 2நாட்கள்தான் தங்கரதம் புறப்பாடு இருந்தது. பிறகு கட் டணம் 350ரூபா ஆயிற்று அப் போது மாதம் 5நாட்கள் தங்க ரதம் புறப்பாடு இருந்தது. பிறகு 500ரூபா கட்டணம் வைத்தார் கள் மாதம் 15நாட்கள் தங்கரதம்

புறப்பாடு இருந்தது. இப்போது 750ரூபா கட்டணம் வைத்திருக்கிறார்கள் மாதம் 25நாட்கள் தங்கரதம் புறப்பாடு இருக்கிறது. கூடிய சீக்கிரம் கட்டணம் 1000 ரூபா ஆக்கப் போகிறார்கள். அப்போது தினசரி தங்கரதம் புறப்பாடு இருக்கும்.

● வயலூர் வள்ளல் ஸ்ரீ சுப்ரமணியஸ்வாமி கோவில் விபூதி, குங்கும பிரசாதங்களை அழகிய சிறுகவர்களில் போட்டு வரும் பக்தர்களுக்குக்கொடுக்க சிறுகவர்கள் அச்சிட்டு உபயமாக அளித்திருக்கிறார்கள் திருச்சி மகாராணி சிட் பண்ட்ஸ் ஸ்தாபனத்தார். அந்தக் கவரில் கேட்டது கிடைக்கும், நினைத்தது நடக்கும், வயலூர் வள்ளல் பிரசாதம் என்று அச்சிட்டிருக்கிறார்கள். வயலூர் செல்லும் பக்தர்களுக்கு இது மிகவும் பயன் தரும் நல்லதொரு செயலாகும். இந்த மாதிரி நல்ல காரியங்களை ஓசைப்படாமல் செய்து வருகிறார்கள் திருச்சி மகாராணி சிட் பண்ட்ஸ் ஸ்தாபனத்தார்.

● விஷ்ணு தியானத்திற்கு உரிய மூல மந்திரம் "ஹரி ஓம் நமோ நாராயணாய" என்பதாகும். இதை அஷ்டாக்ஷரம் என்றும் கூறுவர்.

● சிவ தியானத்திற்கு மூல மந்திரம் "ஓம் நமசிவாய" என்பதாகும். இதைப் பஞ்சாக்ஷரம் என்றும் கூறுவர்.

● சண்டேசுரர், கோயிலின் இடது பக்கத்தில் சிறிய தோர் இடைவழிவிட்டு அமைக்கப்பட்டிருக்கும். மூலஸ்தானத்தில் சாத்திய மாலையும், நைவேத்திய மிச்சமுமே இங்கு பூஜைக்குரியன.

● சனீஸ்வர பகவானை நாம் கும்பிடும்போது சனீஸ்வர பகவானே நான் உன்னைத் தொழுவேன். நீ என்னைத் தொடாதே என வேண்டி தீவினை நம்மை அணுகாதிருக்கப் பிராத்தனை செய்ய வேண்டும்.

● இறைவனும் அவன் சக்தியும் பிரிந்திருப்பது தகாது. ஒன்று சேர்ந்தே விளங்க வேண்டும் என்பதற்காக அம்மை வேறு, அப்பன் வேறாக வைத்து வணங்கிய இரண்டினையும் பூஜை முடிவில் ஒன்று சேர்த்து வணங்குகிறார்கள். அதனால்தான் கோயில்களில் பள்ளியறை வைத்திருக்கிறார்கள்.

● இந்து மதம் மற்ற மதங்களுக்கெல்லாம் காலத்தால் முந்தியது. இவ்வுலகிலுள்ள மத நூல்களில் மிக முந்தினது இந்து மத "ரிக்வேதமே"

● வைணவ சமயம் அநாதியானது. ஸ்ரீயுடன் கூடிய விஷ்ணுவை வழிபடும் கடவுளாகக் கொண்டதால் தமிழ் நாட்டில் இதை "ஸ்ரீவைணவம்" என்று அழைக்கிறார்கள்.

- ருக்வேதத்தின் சிறப்பு, வேதங்களில் பழமையானது. இதில் 10 மண்டலங்களும், 10.552 மந்திரங்களும் உள்ளன.

- பதினெண் புராணங்கள், ராமாயணம், பாகவதம், பாரதம், பகவத்கீதை, தேவார திருவாசகங்கள், நாலாயிர திவ்ய பிரபந்தங்கள் ஆகமங்கள் முதலியன இந்து மதத்திற்கு ஆதாரங்களாகும்.

- "திருவிலச்சினை" என்ற ஐந்து (அங்கங்களை) சமஸ்காரங்களை ஆசாரியனிடமிருந்து பெறுவதால். ஐந்து அங்கங்களைப் பெற்றவர் ஐயங்கார் என்று ஆயிற்று. அதனுல் தான் நாம் வைஷ்ணவர்களை "ஐயங்கார்" என்று அழைக்கிறோம்.

- திருமால் ஆலயங்களில் பள்ளி கொண்டும், நின்றும், அமர்ந்தும், மூன்றுவிதமான திருக்கோலங்கள் கொண்டிருப்பார்.

- திருமால் நின்ற திருக்கோலம் கொண்ட தலங்கள் 60, திருமால் வீற்றிருந்த திருக்கோலம் கொண்ட தலங்கள் 21, திருமால் பள்ளி கொண்ட தலங்கள் 27.

- துளசி என்பது திருமாலுக்கு மிகவும் உகந்த ஒரு வகைச் செடியின் இலையாகும். நல்ல துளசி, கிருஷ்ணதுளசி, ராம துளசி, செஞ் துளசி, கற்பூரத் துளசி, சிவத் துளசி, சிறு துளசி, நிலத்துளசி பெரும் துளசி என பலவகைப்படும்.

- ராமலிங்க வள்ளலார் எப்போதும் முழங்காலுக்கு மேல் வெள்ளை உடை உடுத்தி, தம்முடைய தேகம் பிறருக்குத் தெரியாதபடி மூடிக்கொண்டு முக்காடிட்டு மறைத்த மேனியாய் வீதிகளில் ஓரமாய் செல்லுவார்.

- வடபழநி ஆண்டவர் கோயில் தோன்றி சுமார் நூறு ஆண்டுகளுக்கு மேலாகிறது.

- பழநியாண்டவர் ஒரு முகமும் இரண்டு கைகளும் உடையவர். வலக்கையில் தண்டாயுதம் ஏந்தி, இடக்கையை இடுப்பில் வைத்துக் கொண்டு. கோவணம் உடுத்திய நிலையில் செந்தாமரை போன்ற நிறுத்துடன், நின்ற திருக்கோலத்தில் காட்சி கொடுத்து அருள்பவர் ஆகிய கந்த சுவாமியே, பழநியாண்டவர் என வழங்கப்படுபவர் ஆவர்.

- பழநியாண்டவருக்கு தண்டாயுதபாணி எனப் பெயர் வரக்காரணம் அவர் கையில் தண்டாயுதம் ஏந்தியிருப்பதே.

# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள் வாக்கு



பற்றற்று பயமற்று சினமற்றிருக்கும் மனதே சிரிய மனதாகிறது.

நீ மேலோன் ஆகவேண்டுமானல் உன் இந்திரியங்களை அடக்கி ஆள்.

புலன்களின் வேட்கையிருக்குமளவு நீ துன்பப்பட்டே ஆக வேண்டும்.

ஆசை உன்னைக் கெடுக்கும் நித்திய சத்துரு என்று அறிந்து கொள்.

ஸம்சய மனமுடையவனே தான் எல்லோரிலும் மிகப்பெரிய பாபி.

ஸம்ஸயமுள்ளவனுக்கு இவ்வுலகமும் இல்லை. பரலோகமும் இல்லை.

நம் நிழல் நாம் எங்கு சென்றுலும் கூடவே வருவதைப் போலவே நாம் செய்த தீமையின் விளைவு நம்மைத் துரத்திக் கொண்டே வரும்.

பிறருடைய விருப்பினுலோ, வெறுப்பினுலோ ஒருவன் உயர்வு தாழ்வு அடைவதில்லை.

அவனவன் செய்கையின் விளைவாகத்தான் மதிப்போ, அவமதிப்போ அடைகிருன்.

உயிர் போகும் நிலை வந்தாலும் செய்யத் தகாததைச் செய்யக் கூடாது செய்யத் தகுந்ததையும் விடக்கூடாது. இதுவே நல்லோர்களின் தர்மம்.

மனமே! நீ பிறரை பிழை செய்கிருன் என்கிருயே? அப்பிழையை நீ செய்ததில்லையோ? மழைக்கு இடியாகிய குற்றமுண்டு. சந்திரனுக்கும் குறை இருப்பதைப் பார்க்கிருேம். (உன்னையே நீ எண்ணிப்பார்)

கடவுள் ஒருவரே குற்றம் இல்லாதவர். ஆதலால் நெஞ்சே! நீ

யாரையும் தீயோர் என்று வெறுத்தல் ஆகாது.

ஸம்சய மனமுடையவர்களுக்காகவேதான் கோர நகரம் சிருஷ்டியாகி இருக்கிறது.

அடைக்கலம் புகுந்தவனுக்கு மன அமைதி உடனே உண்டாகும்.

பேத புத்தி உள்ள வரை பயம் நீங்காது. பயம் நீங்காத வரை முக்தி இல்லை.

நீ சுகம் பெறுவதற்கு தியாகம் ஒன்றே உற்ற உபாயம் என்பதை மறவாதிருப்பதே நற்றுணையாகும்.

உன்னையே குருவிற்கு அர்ப்பணம் செய்வாயானல் நீ செய்ய வேண்டிய யாவும் செய்து விட்டவனவாய்.

தூண்டுதலின்றி நாமாகவே செய்யும் குரு கைங்கர்யங்களே உண்மையான கைங்கர்யமாகும்.

தியாகத்தை வளர்ப்பதற்கு செயல் புரிதல் யாகம்; போகத்தை வளர்ப்பதற்கு செயல் புரிதல் பாபம்.

மனிதனுடைய மேன்மைகளையெல்லாம் பொறுமையானது தேய்த்து விடுகிறது.

ஆசை என்னும் திரையினல் உன் ஆத்ம சொரூபம் மூடப்பட்டிருப்பதை அறிவாயாக.

வெளியுலகில் காணும் கேடுகளெல்லாம் உன் மனத்தில் இருக்கும் கேட்டின் புறத்தோற்றங்களாம்.

ஆசையற்ற மனநிலைக்குச் சமானமான சுகம் ஸ்வர்க்கத்திலும் இல்லை. கைலாயத்திலும் இல்லை.

ஆசை கொடியது. பிறவிப் பெருங்கடலில் உன்னை ஆழ்த்தி விடும்.

ஸ்ரீ சத்குருவினிடம் நம்பிக்கையும், அசைக்க முடியாத உறுதியும் இருப்பின் ஆச்சரியமான சக்தியைக் காண்பாய்.

அதர்மத்தினல் மனிதன் சிறிது காலம் க்ஷேமமுறலாம். ஆனல் அவன் அடியோடு நாசமாகிறுன்.

ஸத்குரோ! என்னை நீ உன்னில் கலப்பதற் கேற்ற தூய்மையை எனக்கு நல்குவாயாக.

பொய் சொல்வதே தமது திறமையாகக் கொண்டவர் .எப்பொழுதும் எல்லாப் பாபங்களும் செய்கின்றனர்.

உலகம் கீழ் மேலாகத் தடுமாறினும் பிறர்க்குத் துன்பந்தரும் பொய்யை நீ மனதிலும் நினையாதே.

குடம் நிறை நீர் இருப்பின் அசைந்து ஓசையிடாது.

# அருள் வாக்கு



ஸ்ரீ மௌனஸ்வாமிஜீ
அம்பத்தூர்

ஜ்ஞானமென்னும் சுப்ரமண்யரை குருவாகக் கொண்டு, விஞ்ஞானமென்னும் மங்கள விநாயகரை பூஜித்து, திடசித்தமென்னும் ஈஸ்வரனுடைய ஆராதனையிலீடுபட்டு, பக்தியென்னும் ஆஞ்சநேயரைக் கூடி, "தத்" பொருளென்னும் விஷ்ணுவைப் பாடி, ப்ரம்மஸ்வரூபமாக விளங்கும் அம்பிகையின் ஸ்ரீபுரத்தை அடைந்து, "ஸர்வம் மாத்ரு ஸ்வரூபம்" என்ற தியானத்தைக் கொண்டு சாந்தியென்னும் நிலாவைக் கூடு.

ஜகன்மாதாவின் அருளை அடையும்போது நம்மிடம் குடிகொண்டிருக்கும் காமம், குரோதம் முதலியவை அடங்குமென்பதை சக்திவேலைத் தரித்த சுப்ரமணியரிடமிருந்து தெரிந்துகொள்ளலாம். சக்திவேல் பராசக்தியின் ஸ்வரூபம்.

பராசக்தி எப்பொழுதும் தன் பிள்ளையை மார்போடு அணைத்த வண்ணமாக விளங்கிக்கொண்டிருக்கிறாள். அதுபோல நாமும் ஜபம் தியானம் முதலியவற்றால் பரிசுத்த ஹ்ருதயம் உடையராகிவிட்டால், குழந்தையாக பராசக்தியிடம் விளையாடி, ஞானமென்னும் வேலைத் தரித்தவராகி சாந்தி பெற்று விளங்குவோம்.

முன்னால் ஸங்கீர்த்தனத்தாலும் நாமோச்சாரணத்தாலும் கலியின் ஆவேசத்தை குறைந்துக் கொண்டால்தான் ஆஸ்தீக புத்தி ஏற்படும். ஆதலின், நான் முதலில் கடவுட் பஜனை செய்யவேண்டும். ஏகாந்தமாக உட்கார்ந்து சிறிது நேரம், "ஹரே ராம், ஹரே கிருஷ்ண," என்று உச்சரிக்க வேண்டும். அப்போதுதான் கலியின் ஆவேசம் தீர்ந்து, பரிசுத்த ஹ்ருதயமுடையவராவோம்.

ஸரஸ்வதி தேவி தமக்கு ப்ரஸன்னமாக அருள்புரிய வேண்டுமானுல், மங்கள விஞயகரை பூஜிக்க வேண்டுமென்று நன்ருக விளங்குகிறது. இதற்கு தக்கசான்று, ஸ்ரீ வியாஸர் பாரத ஸ்லோகங்களைப் பாட, மங்கள விஞயகர் தம் ஒரு தந்தத்தை ஒடித்து எழுத்தாணியாகக் கொண்டு மேருவாகிய ஏட்டிலே வரைந்து வைத்ததேயாகும்.

ஏகதந்தாய வித்மஹே வக்ர துண்டாய தீமஹி தன்னே தந்தி: ப்ரஜோதயாத்.

இது மங்கள விஞயகருடைய மூல மந்திர காயத்ரியாகும். எந்த தந்தத்தை எழுதுகோலாகக் கொண்டு, உலகம் முதல் ப்ரம்ம வித்தை வரையுள்ள க்ரந்தங்களை வரைந்து, தம் புத்திக் கூர்மையினுலே "நான் ப்ரம்மம்! நான் ப்ரணவ ஸ்வரூபம்!" என்பதை உணர்ந்து மூர்த்தியாக ப்ரகாசித்தாரோ அந்த மங்கள விஞயகர் நம்மைக் காப்பாராக.

ஸதா பகவானிடத்தில் மனத்தை ஏகாக்ர சித்தப்படுத்துவதுதான் ஞானமெனப்படும். அறிவு, அறியாமை, இவைகளை தன் அனுபவத்தால் தெளிவுபட உணர்வதுதான் விஞ்ஞானம். ஆகவே, ஞானத்தைக் கொண்டு அனுபவம் உண்டாக, பின்பு ஆத்ம ஞானம் உண்டாகிறது. மனத்தையுடைய மனிதன் நன்கு விளக்கமாக அறிகிறதிஞலே மனித பிறவியே மேன்மையுள்ளது. மனித ஜன்மம்தான் நன்மை அளிக்கிறது. என்றெல்லாம் நம் பெரியோர்கள் நமக்கு உபதேசித்திருக்கிருர்கள் அல்லவா?

எதற்கும் ஞானம் முக்கியம். அதாவது ஆத்ம சாந்திக்கான வழியை உள்ளேயிருக்கிற மனதைக் கொண்டே நாம் அறிய வேண்டும்; என்னுள்ள திட சித்தம் ஏற்பட்டு உழைத்துக் கொண்டே யிருப்பது ஞானம். இதுவே விஞ்ஞானமாக நாம் அறிந்ததும், நம் மனத்தை நாமே அறிந்தவராவோம். மனத்தை அறிந்தால் நாம் அறிய வேண்டிய விஷயம் வேறென்றுமில்லை. அந்த மனமே நமக்கு எல்லா விஷயங்களையும் காட்டும்.

நம்மிடையே சிலர் அவதார புருஷர்களைப் பற்றி கூறும்போது, "அவர்களெல்லாம் பெரியவர்கள்" என்று உரைத்துவிட்டு மனம் உருகாதவர்களால் "நம்மால் அவர்களைப்போல் ஆகமுடியுமா?" என்ற தாழ்வான நிலையை அடைந்து, உடனேயே அதை மறந்தும் விடுகிருர்கள். அது முறையன்று. 'அவர்களைச் சிறிது காலம் தெய்வமாகக் கருதிப் பூஜித்து அவர்கள் அருளாலே நம்மால் அவர்களைப் போல (அவதார புருஷர்களைப்போல) ஆகமுடியும்?' என்று உறுதியாக எண்ணி உள்ளூற முயற்சிசெய்து தெய்வீக சக்தியை உணரவேண்டும். மனிதன் தான் யோகியாகிருன் என்பதை மறக்கக்கூடாது.

# சாதனை

ஸ்ரீ சுவாமி சிதானந்தா

சாதனை என்பது செயல். அதன் பொருட்டே நாம் இம்மண்ணுல கிற்கு வந்துள்ளோம். இதற்குச் சாதனை—பூமி என்றே பெயர்.

இம் மண்ணுலகின் மீதுதான், இறையுணர்வுக்கான சாதனை செய்து முடிக்கப்பெறும். மற்ற உலகில் அவ்வாறு இல்லை. தாழ்ந்த லோகமான நரகத்தில் ஒருவனது தீவினைகள் தவருன செயல்கள், பாவச் செயல்கள் ஆகியவற்றிற்கான தண்டனைகளை அவன் அனுபவித்துத் தீர்க்கின் ருன். மேல்லோகமான தேவலோ கத்தில் ஒருவன் செய்த புண்ணி யத்திற்கான நற்பலன்களை அவன் அனுபவித்துத் தீர்க்கின்ருன்.

ஆனல் இவற்றில் ஏதாவது ஒன்றிற்குச் செல்வதற்கு முன் இருந்த இடமாகிய இம்மண்ணுல கிற்கே மீண்டும் அவன் வர வேண்டியிருக்கிறது. அதன் பின் னரே அவன் அங்கு செல்ல வேண் டும்.

ஆனல் அவன் இம்மண்ணில் நல்லவண்ணம் வாழ்வானுனல் நிலைத்த வாழ்விற்கான இருப் பிடத்திற்கு அவன் செல்லக் கூடும். அவ்வுலகினின்று துன் பம், தொல்லைகள் பிறப்பு, இறப்பு ஆகியவற்றிற்கு உறைவிடமான இம் மண்ணிற்கு அவன் மீண்டும் வரவேண்டிய அவசியம் இல்லை.

ஆகவே சாதனை இன்றியமை யாதது. இறையுணர்வு சாதனை யின் மூலம் கிட்டுகிறது. சாதனை என்ருல் என்ன? சாதனை என்பது செம்மை வாழ்வு — தெய்வீக வாழ்வு—தன்னிலை இன்னதென உணர்ந்த வாழ்வு—நீ எதுவோ அது என்பதனை வெளிப்படுத்தி விளக்கம் பெற, நீ துவக்கும் வாழ்வு.

நீ என்றும் தூய்மையன், களங்க மற்றவன், உனது எண்ணங்களில், சொற்களில், உனது புதுப்புது ஆசைகளில், உனது தினசரி வாழ் வில் உள்ளுறை நோக்கங்களில் என்றும் தூய்மையன், இயல்பிலே உத்தம சிலன் என்பதனை வெளிப் படுத்துவது நல்லது. அதனை செயல் படுத்து. அவ்வாறே வாழ்ந்து காட்டு. அதனைப்

பாரெங்கும் பரப்பு. அதுவே சாதனை.

நீ சத்தியப் பொருள், நித்தியப் பொருள், மேலாம் பரம்பொருள். இவ்வுண்மையினை வெளிப்படுத்து. உனது உள்ளத்தினின்று பொய்மையினைக் கட்டுடன் வேரறு. உண்மையின் உருவாகத் திகழ். உன் இயல்புக்கேற்ப இரு. உன் இயல்பிற்கு மாறுபட்ட நேர்மாறான வாழ்வாக இருத்தல் கூடாது. அதுவே அவசியமான சாதனை.

தெய்வீக வாழ்வு வாழ்வதற்கும் எண்ணம், சொல், செயல் ஆகியவற்றில் தெய்வீகமாக இருப்பதற்கும் அதுவே நேரடிப் பாதையாகும்.

உன்னத சாதனை என்பது தெய்வீக வாழ்வே. ஆங்கு ஒவ்வொரு எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் தெய்வீக மணம் இழையோடி நீக்கமற நிறைந்திருக்கும். தெய்வீக வாழ்வின் மூலம், உனது வாழ்வின் எல்லா அம்சங்களிலும் உன்னுள்ளே மறைந்து கிடக்கும் தெய்வீகத் தன்மையினை வெளிப்படுத்தி இத் தெய்வீக அனுபவத்தினைப் பெற்றுத் தெவிட்டா இன்பத்திலே திளைத்திரு.

பேரின்ப நிலையில் இவ்விதமாக துணிந்து வெளிப்படையாகக் கூறு: ''சிதானந், சிதானந், ஓம். நான் எல்லா நிலைகளிலும் சத், சித் ஆனந்த வடிவினன்.'' இதற்காகப் பாடுபட்டு, உனது பிறப்புரிமைக்குப் போராடு. நம்பிக்கையுடனும், பொறுமையுடனும், மகிழ்ச்சியுடனும் இக்குறிக்கோளை நோக்கிப் பணி செய். நீ பணி புரிந்து கொண்டிருக்கும்போது கூட இவ்வுள்ளுணர்வையும், உண்மை தெரிந்த நிலையையும் விட்டு விடாதே.

எல்லாக் காரியங்களிலும் ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் இதனை உறுதிப்படுத்திக்கொள். சந்தர்ப்ப சூழ்நிலைகளின் மீது வெற்றிக்கொடி நாட்டு. உனது மனத்தை வென்று, ஆசைகள் அனைத்தையும் நிர்மூலமாக்கி, உனது விதிக்கு நீ தந்தையாயிரு; ஏனெனில் நீயே தலைசிறந்த தலைவன்.

மீண்டும் எளியேன் பகிர்கின்றேன், அதற்காக நீ பாடுபட வேண்டும். உச்சியை அடைய உனக்கு விருப்பமிருப்பின், நீ மலையேறியே ஆகவேண்டும். நீ உச்சி மீது இருக்கும்பொழுது எல்லா உழைப்பும் வெறும் குழந்தையின் விளையாட்டுபோன்று உனக்குத் தோன்றும்.

அதுவரை, நீ ஓயாது ஒழியாது படிப்படியாக ஏறித்தான் ஆக வேண்டும். உண்மை தெரிந்த நிலையில் பிடிப்பைத் தளர்த்தாது நீ ஏற்கனவே உச்சிமீது இருப்பதாக உணர்ந்துகொள். ஆனால் மலையேறுவதை மட்டும் நிறுத்தி விடாதே. மலைமீது ஏறு, ஏறு, படிப்படியாக ஏறி முன்னேறு. இதுவே சாதனையின் இரகசியமாகும்.

உன்னில் ஒழுக்க சீலத்தினைப் பேணி வளர்த்துக் கொள்வாயாக. உண்மை, தூய்மை, நலம் ஆகிய வற்றைக்கொண்ட பாதையில் நீ நடைபோட்டு உனக்காகக் காத் திருக்கும் மேன்மை மிக்க குறி யினை நோக்கி முன்னேறுவாயாக. இதுவே உனது பிறப்புரிமை. அதன் பொருட்டு இவ்வுடலாகிய கூட்டில் நீ வாழும் பொழுதே போராடி, வெற்றிபெற்று இன் பத்தினை நுகர்வாயாக. அதனை எக்காரணம் பற்றியும் தள்ளிப் போடாதே. விழிப்புடனிருந்து செயல்படு. சீர்மை பெறு.

உனது வாழ்வில் வலிவோடும் பொலிவோடும் வெளிக் கிளம்பி, நீ முழு வெற்றியடைய இத் தொண்டனின் இதயங்கனிந்த பிரார்த்தனைகள் உன்னுடன் என் றும் இருப்பதாக ஆகுக. இறை யுணர்வின் மகிமையிலே நீ வளங் கொழிக்க வாழ்வாயாக.



- முருகனின் ஆறுபடை வீடுகளில் திருவாவினன்குடி என அழைக்கப்படும் பழநி மூன்ருவதாகத் திகழ்கிறது. இது ஒன்றுதான் மக்களின் பெயராக வைத்துப் பெரிதும் வழங்கப்படுகிறது.

- முருகப்பெருமான் குழந்தைகளுக்கு குழந்தை வேலன் ஆகவும், இளைஞர்களுக்குப் பாலசுப்ரமணியன் ஆகவும், கலைஞர்களுக்கு ஷண்முகநாதன் ஆகவும், வீரர்களுக்கு தேவசேனபதி ஆகவும், மந்திரோபதேசம் பெற விரும்பி வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமிநாதன் ஆகவும், இல்லற நிலையினருக்கு வள்ளி தெய்வயானை சமேத சுப்ரமணியசுவாமி யாகவும் பற்றற்ற தூய ஞானத் துறவற நிலையினருக்குப் பழநியாண்டவர் ஆகவும் காட்சி தந்து அருள்புரிந்து காத்து வருகிருன்.

- திருமாலின் பூம்பொழில் ஸ்ரீரங்கமாகும். ஸ்ரீரங்கம் தென்னிந்தியக் கோவில்கள் அனைத்தினும், தனித்த ஒரு அகன்ற நிலப்பரப்பைக் கொண்டதாகும். வைஷ்ணவர்கள் இக்கோயிலையே "பெரிய கோவில்" எனப் பாராட்டுகின்றனர்.

- ஸ்ரீரங்கம் பெரிய கோவில் தென்னுட்டுக் கோவில்கள் யாவற்றையும் விட மிகப் பெரிய தாகும். இதன் நிலப் பரப்பு அரை சதுர மைலுக்கு மேல் ஆகும்.

- ஸ்ரீரங்கம் பெரிய கோவில் பல பிரகாரங்களில் திருவாயில்கள் ஏற்பட்டுள்ள சிறிதும் பெரிதுமான 21 கோபுரங்கள் யாவற்றிலும் உன்னதமான கோபுரம் வெள்ளைக் கோபுரமாகும். இது வர்ணம் பூசாது வெள்ளைச் சுண்ணச்சாந்தின் நிறமாகவே இருப்பதால் இது வெள்ளைக் கோபுரம் எனப்படுகிறது. இதன் உயரம் 164 அடி.

- பழநி தண்டாயுதபாணி ஸ்வாமியை தரிசிக்க வரும் பக்தர்கள் அவர்கள் வீட்டுக்குக் கொண்டு செல்ல வசதியாக அடிவாரத்தில் S சித்தனுதன் சன்ஸ் அழகிய பிளாஸ்டிக் டப்பிகளில் அவர்களின் ஸ்பெஷல் பஞ்சாமிர்தம் அடைத்து விற்பனை செய்து வருகிருர்கள். இது கொண்டு செல்ல வசதியாகவும், மெல்லியதாகவும் அழகாகவும், கவர்ச்சியாகவும் இருக்கிறது. இது மாதிரி வேறு எவரும் பிளாஸ்டிக் டப்பியில் பஞ்சாமிர்தம் விற்பனை செய்வதாகத் தெரியவில்லை.

- துறவியர்களுக்கு எல்லாம் தலைவன் சிவபெருமான்.

தியாகராஜன் என்ற பெயர் அவருக்கே உரியது. சிவபெருமானின் ஆபரணங்களில் முக்கியமானது பாம்பு. பிட்சை எடுப்பதற்கு மண்டை ஓடு ஒன்று கையில் வைத்திருக்கிருர். பிணத்தை சுட்டெரித்த சாம்பலே உடலெல்லாம் அவர் பூசிக்கொண்டிருக்கிருர்.

- திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், பழமுதிர்ச்சோலே, திருவாவினன்குடி என்ற பழநி, சுவாமிமலே திருத்தணி ஆகிய ஆறு ஊர்களும் முருகனின் ஆறுபடை வீடுகள் ஆகும்.

- முருகனுக்கு வாகனம் மயில். அது பெரும்பாலும் ஒரு பாம்பின் மீது நின்று கொண்டு தோகையை விரித்து ஆடிக்கொண்டிருக்கும். பாம்பு சக்தியின் சின்னம். அது மயிலுக்கு அடங்கி நடக்கிறது. சக்தி வடிவேலன் சக்தியை முற்றும் ஆளுகிருன் என்பது கருத்து.

- விநாயகர் ஒரு கொம்பு, இரு செவிகள், மூன்று திருக்கண்கள், நான்கு திருத் தோள்கள், ஐந்து திருக்கரங்கள், ஆறெழுத்துக்கள் உடையவர். அவரை வழிபட்டோர் ஏழு பிறவிகளும் நீங்கி எண் திசைகளும் புகழ, ஒன்பது மணிகளும் பெற்று சம்பத்துடன் வாழ்வார்கள்.

- விநாயகருக்கு கரும்பு, அவரை, பழங்கள் சர்க்கரை, பருப்பு, நெய், எள், அவல், பொரி, துவரை, இளநீர், தேன், பயறு, அப்பம், பச்சரிசி, பிட்டு, வெள்ளரிப் பழம், கிழங்கு, அன்னம், கடலே முதலியன வைத்து நிவேதனம் செய்ய வேண்டும்.

- மக்கள் அனைவரையும் ரக்ஷித்துவரும் அம்பாளாகிய சமயபுரம் மஹமாயியின் அழகு தெய்வீகமானது. ஐந்து அசுரர்களின் தலேகளே, தன் காலால் மிதித்துக் கொண்டு சர்ப்பக் குடையுள், தனது சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் அழகைப் பார்த்தாலே அவரவர் அகமும் புறமும் சுத்தமாகும்.

- ஆலயவழிபாடு நம் நாட்டில் தொன்று தொட்டு இருக்கிறது. எல்லாம் கடவுளின் ஸ்வரூபம் என்ற பக்குவ நிலே ஞானிகளுக்குத் தான் ஏற்படும். சாமானிய ஜனங்களுக்கு கடவுளே நினேக்க ஆலயவழிபாடு அவசியம் வேண்டும்.

- புஷ்பங்களே கிள்ளி பூஜிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் துர்ப்பாக்கியம் ஏற்படும். ஆனல் பத்திரங்களேக் கிள்ளி அர்ச்சிக்கலாம். வில்வம், துளசி இவைகளே தளமாக பூஜிக்கலாம்.

# வெற்றி உங்கள் கைகளிலே...!

ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்



நீங்கள் வாழ்க்கையில் வெற்றி காண விரும்புகிறீர்களா? நிச்சயம் நீங்கள் வெற்றிகாண முடியும். வெற்றியைத் தேடி நீங்கள் அலைய வேண்டியதில்லை. அது உங்கள் கைகளிலேயே இருக்கிறது. உங்களிடம் உள்ள தன்னம்பிக்கையையும் ஆர்வத்தையும் ஆற்றலையும் வளர்ப்பதுதான் அதற்கு வழி.

வாழ்க்கையில் வெற்றிபெற விரும்புவோர் தன்னம்பிக்கையை அணிகலனாகக் கொள்ளவேண்டும். தன்னம்பிக்கை இல்லாத காரணத்தினால் நம்முடைய இளைஞர்கள் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையை இழந்து விடுகின்றனர். சில இளைஞரிடையே காணப்படும் வன்முறைகளுக்கு இதுவே காரணம்.

எவருடைய கையையும் நம்பியிராமல் நமது காலில் நிற்கமுடியும் என்ற தன்னம்பிக்கையை இளஞ்சமுதாயத்திடம் வளர்க்க வேண்டும். வாழ்க்கையில் ஏற்படும் எந்தச் சிக்கலையும் துணிவுடன் எதிர்கொள்ளும் ஆற்றலை உருவாக்க வேண்டும்.

சின்னஞ்சிறுவனுன டேவிட் மாவீரன் கோலியாத்தை தன்னந்தனியனுக எதிர்த்து வெற்றி கொண்டு யூத இனத்தினேயே காத்தான். காரணம் தன்னம்பிக்கை அல்லவா?

மாபெரும் பிரிட்டிஷ்பேரரசினே நிராயுதபாணிகளான நாம் எதிர்த்து விரட்ட வில்லையா? அண்ணல் காந்தியடிகள் கற்றுத் தந்த தன்னம்பிக்கை எனும் பேராற்றல் நமக்குத் துணே நின்றது.

ஹெலன் கெல்லர் என்ற அம்மையாரை நீங்கள் அறிவீர்கள். அவருக்கு கண் குருடு; காது செவிடு. வாய் ஊமை. தன்னம்பிக்கை நிறைந்த அப்பெண்மணி விடாமுயற்சியுடன் உழைத்து எம். ஏ. தேர்வு பெற்ருர். உலகம் முழுவதும் ஊனமுற்ற மக்களுக்கு உழைத்து உயர்வு பெற்ருர்.

அவர் சொன்ஞர்:

''நீலப் பெருங்கடலேயும், விண்மீன்கள் நிறைந்த வானவெளியையும் நான் கண்டதில்லே. ஆனுல் அவற்றின் பேரழகினே நான் உணருகிறேன். வாழ்க்கையில் ஒரு விஞடிகூட நான் துன்பப்பட இறைவன் என்னே விட்டதில்லே. முழுமகிழ்ச்சியுடனும் நிறைவுடனும் தன்னம்பிக்கையுடனும் நான் வாழ்க்கையை அனுபவிக்கிறேன்.''

அதேவேளே, ஐரோப்பாவையே நடுங்கவைத்த மாவீரன் நெப்போலியன், வாழ்வில் ஒரு விஞடிகூட நான் மகிழ்ச்சியுடன் இருந்ததில்லே என்கிருன்!

இன்பமும் துன்பமும், வெற்றியும் தோல்வியும் நம்மிடையே உள்ளன. பிறர் நமக்கு அவற்றை அளிப்பதில்லே. நாமாகவே அவற்றைப் பெறுகிருேம். நம்மிடமுள்ள நம்பிக்கையின் அளவைப் பொறுத்தே வெற்றியின் அளவும் இருக்கும். எனவே தன்னம்பிக்கையுடன் உழைத்து வெற்றி பெற முயல்வோம். ○

---

○ திருநீறு, விபூதி, பசுமம், பசிதம், சாரம், இரட்சை என்ற பல பேர்களேயுடையது விபூதி. ஆன்மாக்களின் பாவங்களேயெல்லாம் நீறு செய்வதாஞல் திருநீறு.

○ சைவஞகப் பிறந்து எவன் திருநீறு அணியாமல் மயானம் போல் நெற்றியை வைத்துக் கொண்டிருக்கிருனே? அவனுடைய நெற்றியில் தீயை வை என்று பிருகத் ஜாபலம் என்ற உபநிஷதம் முழங்குகிறது.

○ தினசரி கோயிலுக்குச்சென்று வழிபட முடியாதவர்கள், சோமவாரம், பௌர்ணமி, அமாவாசை, திருவாதிரை, கார்த்திகை, மாதப் பிறப்பு, சிவராத்திரி முதலிய புண்ணிய நாட்களிலாவது கோவிலுக்குச் சென்று வணங்கவேண்டும்.

# கடவுள்

மஹாவித்வான்
ஸ்ரீ ஆறுமுகநாவலர்

கடவுள் என்ற பதத்தின் பொருள் யாது?

கடவுள் என்ற பதம் கட என்னும் பகுதியும் உள் என்னும் தொழிற்பெயர் விகுதியும் பெற்றது. செய்யுள் என்பது செய்தல் என்று பொருள் படுவதுபோல கடவுள் என்பதும்கடத்தல் என்று பொருள்படும். ஆகவே கடவுள் என்பவர்எல்லாவற்றையும்கடந்து நிற்பவர் என்பதாயிற்று.

கடவுள் ஒருவர் உண்டா? அவர் உண்டென்று நம்புவதெப்படி?

ஒரு பொருள் உண்டென்று நம்புவதற்குப் பிரத்தியட்சப் பிரமாணம், அனுமானப்பிரமாணம், ஆகமப்பிரமாணம் என மூன்று அளவைகள் உள்ளன.

பிரத்தியட்சப்பிரமாணம்நேரில் காண்பது; அனுமானப்பிரமாணம் தெரியாத ஒன்றை வேறொன்றன் மூலமாக அறிவது; ஆகமப் பிரமாணம் நூல்களால் அறிவது. நூலறிவு, சுயானுபவ அறிவாகாது; ஆதலால் அதனை வேறு அறிவுகளினாலும் விளங்க வைக்கவேண்டும். நேரிற் காணு மறிவு சிறந்ததேயெனினும் அது கடவுள் சம்பந்தமாக எளிதில் பயன்படாது; ஆதலால், அனுமானப்பிரமாணமே நமது ஐயத்தை நீக்கத் தக்க அளவையாகின்றது. மலை மீது தீ எரிந்துகொண்டிருக்கின்றது. நேரில் அதனைக் காண மிகவருந்தி உழைத்தால் மாத்திரம் இயலும். வருந்தி உழைக்க இயலாதவர்கட்குநேரிற் காணவியலாது. தீயிலிருந்து கிளம்பும் புகையைக் கண்ட எவனும் மலையில் தீ உண்டென்று உறுதியாக நம்புவான்.

அதுபோலக் கடவுளையும் நேரிற் காணுவது எளிதன்று; மிகவருந்தி உழைந்தால் இயலும். உழைக்க இயலாதவன் படைப்புப்பொருள் அனைத்தையும் கண்டும், அவற்றுள் அடங்கிக் கிடக்கும் அற்புதங்களைக் கொண்டும் அவற்றை உண்டாக்க ஒரு தலைவன் உளனென உணரல் வேண்டும்.

அவற்றை உண்டாக்க ஒரு தலைவன் தான் வேண்டுமோ? இயற்கையாய் நடக்கிறதென்று ஏன் கூறுதல் கூடாது?

இயற்கை காரண காரியங்களோடியைந்தது. கடவுள் காரண காரியங்களுக்கு மேற்பட்டவர். மரத்தினின்று வித்தும் வித்தினின்று மரமும் உண்டாவது இயற்கை. இவற்றுள் முதலில் உண்டாவது வித்தா? மரமா? வித்தினையோ மரத்தையோ ஆதியில் உண்டு பண்ண ஆதிமூலப் பொருளொன்று இருந்துதானே தீர வேண்டும்? படைப்புப் பொருள்கள் அனைத்தும் தோன்றுவதற்குக் காரணமாக நின்று அவை இயற்கையாய் நடப்பனபோல் காட்டுவதே ஆண்டவனது அருட் செயலாகும்.

கண்ணால் காணமுடியாத கடவுளை உண்டென்று நம்புவதெப்படி?

பாலினுள் நெய்யிருப்பதும், பாலைப் பார்த்தபோது காணமுடிகிறதா? இல்லையே! அதனால்பாலில் நெய்யில்லை என்று கூறுவோர் யாரேனுமுண்டா? ஒருவருமில்லை. நமது கண்ணுக்குக் காணமுடியாததும், பாலில் எங்கும் வியாபித்திருப்பதுமாகிய நெய்யைக் காண, பாலைக் காய்ச்சித் தயிராக்கி, தயிரில் மத்தினை ஊன்றி முறுகக்கடைதல் வேண்டும்; கடைந்தால் அதிலிருந்து வெண்ணெயும் நெய்யும் பெறலாம்.

அதுபோல, கடவுள் இவ்வுலகத்தில் காணமுடியாதபடி மறைந்திருக்கின்றனர். அவரைக் காண்பதற்கு, பேரன்பாகிய மத்தினை ஊன்றி, அறிவாகிய கயிற்றினால் முறுகக் கடைந்தால், முடியும்.

வாயுவை நமக்குக் கண்ணால் காண முடிகிறதா? மின்சாரத்தைக் கண்ணால் காணமுடிகிறதா? நமது கண்ணுக்குக் காணமுடியாததால் அவையில்லையென்று நாம் சொல்ல முடியுமா? அவை செய்யும் வேலைகளைக்கொண்டு அவை உண்டென்று எப்படி நம்புகிறோமோ, அப்படியே கடவுளின் ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய தொழில்களைக் கண்டு அவன் உண்டென்பதை அறிந்து கொள்ளவேண்டும்.

உயர்பதமடைய நல்லொழுக்க வாழ்க்கை உறுதுணையாயிருக்க, கடவுள் கொள்கையின் அவசியமென்ன?

ஒருவன் நல்லொழுக்கமுடையவனால் இருப்பதற்குள்ள காரணமென்ன? எதைக் கருதி? இரவு நடுச்சாம வேலையில், தன் வீட்டில், வேறு துணையின்றித் தங்கியிருக்கும் ஒருவனைக் கொலை செய்து இலட்சக்கணக்காய் அவன் கையிலிருக்கும் பொருளைத் திருடிக் கொண்டால் என்ன குற்றம்? தன் பழிச் செயலை வேறெவரும் அறியவில்லை; அவமானமில்லை; தன் குடும்பத்தாரும் அதனால் மிகுந்த இன்பம் அனுபவிக்கலாம். இவ்வளவிருந்தும், தான் செய்யும் குற்றத்தை எவரும் அறியாது போனாலும், எல்லாவற்றையும் உணரும்

இறைவன் இதனை யறிந்து தக்க தண்டனை விதிப்பான் என்பது கருதியன்றோ அது செய்யா தொழுகின்றான்? எனவே, கடவுள் நம்பிக்கையிருந்தால் மாத்திரமே மக்களிடம் நல்லொழுக்கம் மிகும் என்பது விளங்குகின்றது. கடவுள் நம்பிக்கையின்றேல் எத்தகைய தீய செயலும் செய்யும் திடம்மிகுந்து தீமை பல விளையும். ஆதலால், நல்லொழுக்கம் வளர்வதற்கும் கடவுள் நம்பிக்கை இன்றியமையாத நாகும்.

கடவுளின் இயல்பு யாது?

அகரவுயிர் போல் அறிவாகி யெங்கும் நிகரில் இறைவன் நிறைந்து நிற்கின்றான். அவன் விசுத்த தேகத்தினன்; இயற்கை யறிவினன்; எல்லாமறிபவன்; அஞ்ஞானத்தைத் தருவனவாகியமலங்கள் இயல்பாகவே இல்லாதவன்; சுதந்திரன்; அனந்த சக்தியுடையவன்; பரிபூரணன்; பேரருளுடையவன்.





தூக்கங் கெடுத்தான் சுகங்கொடுத்தா னென்னுளத்தே
ஏக்கந் தவிர்த்தா னிருளறுத்தான்—ஆக்கமிகத்
தந்தா னெனையீன்ற தந்தையே யென்றழைக்க
வந்தானென்னப்பன் மகிழ்ந்து. —திருவருட்பா

# அங்கம் பூம்பாவையார் வரலாறு

சென்னையைச் சார்ந்த திருமயிலாப்பூரில், வைசியர் குலத்தில், சிவபக்தி அடியார் பக்தியில் சிறந்த சிவநேசச் செட்டியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பிள்ளைப் பேறின்றி நெடிது தவமிருந்து ஒரு பெண் மகவைப் பெற்றார்; அம் மகளுக்குப் பூம்பாவை என்று பெரிட்டார். அருமை பெருமையுடன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பூம்பாவை வளர்ந்து வந்தாள்.

ஒருநாள் பூம்பாவையார் நந்தவனத்தில் பூப்பறிக்கையில் அரவந் தீண்டி இறந்தார். சிவனேசச் செட்டியார் மிகமிகத் துன்பமடைந்து, பூம்பாவையார் உடலைத் தகனஞ் செய்து, எலும்பையுஞ் சாம்பரையும் குடத்திலிட்டுக் கன்னிமாடத்தில் வைத்துப் போற்றிவந்தார்.

ஒருநாள் தென்தமிழ் திகழத் திருக்கழுமலத்தில் அவதரித்த திருஞான சம்பந்தர் என்னும் ஆளுடைய பிள்ளையார், திருவொற்றியூரில் எழுந்தருளியிருப்பதை அடியார் மூலமாய் அறிந்த சிவனேசச் செட்டியார், அப்பிள்ளையாரை அணுகித் துதித்து வணங்கித் திருமயிலைக்கு எழுந்தருளுமாறு வேண்டினார். ஆளுடைய பிள்ளையாரும் அவ்வாறே உடம்பட்டுத் திருமயிலைக்கு எழுந்தருளினார். செட்டியார், அடியார்களோடும் அவரை நடைக்காவணமிட்டு எதிர்கொண்டு அழைத்தார். சுவாமிகள் திருமயிலையில் ஸ்ரீகபாலீசரைத் தரிசனஞ் செய்து, திருக்கோயில் மதிற்புறத்தே சென்றருளினார். அடியார்கள் சுவாமிகளிடம் சிவனேசச் செட்டியார் குறையை விண்ணப்பிக்க, சுவாமிகள் கேட்டருளி எலும்பும் சாம்பரும் நிறைந்த குடத்தை திருக்கோயிற் புறத்தேயுள்ள சந்நிதி வாயிலிற் கொண்டு வருமாறு செட்டியாருக்குக் கட்டளையிட்டார். செட்டியார் குடத்தைச் சந்நிதி வாயிலிற் கொண்டுவந்து வைத்தார்.

ஆண்டுத் திருமயிலையிலுள்ள சிவனடியார்களும், புறச் சமயத்திலுள்ளவர்களும், பொறாமை கொண்ட மனத்தினரும் ஒருங்கு கூடினர். சைவந் தழைக்கவந்த பெருந்தகையார், சிவபெருமான்

திருவருட் பெருமையைத் தம் மனத்தே எண்ணி, மண் குடத்தை நோக்கியருளி "மக்கள் பிறப்பினலாய பயன் சிவனடி யாருக்கு அமுது செய்வித்தலும், சிவபெருமானுடைய திருவிழா வைக் கண்டு தரிசித்தலும் என் பது உண்மையாயின், இவ்வுலகத் தார் காண எழுந்து வருவாயாக" என்னும் கருத்து அமைந்த 'மட்டிட்ட புன்னையங் கானல் மட மயிலே' என்று தொடங்கும் திருப் பதிகம் பாடி யருளினர். அப் போது செந்தாமரையில் இலங் கும் திருமகள் போலக் குடத்தி னின்றும் பூம்பாவையார் எழுந்து இலங்கினர்.

இந்த அற்புதத்தைக் கண்ட சிவனேசச் செட்டியார் மெய்ம் மயிர் பொடிப்ப, விதிர்விதிர்ப் படைந்து, கண்கள் நீர்வார உலக முய்ய வந்த ஆளுடைய பிள்ளை யின் திருவடியில் விழுந்து வணங்கி எழுந்து நின்று, தம் பொருளையும் பூம்பாவை யாரையும் அப் பெரு மானுக்கே அர்ப்பணஞ் செய் திருந்த செய்தியை அவர் திரு முன்பு விண்ணப்பித்து, அவ் வாறே பூம்பாவையை மணந்து ஆட்கொள்ள வேண்டினர். ஞான சம்பந்தப் பெருமான் அவ்வுரை தகாதென்று மறுத்துச் செட்டி யாருக்கும், உறவினருக்கும், மற்றையோருக்கும் திருவருளின் பெருமையை எடுத்துரைத்து இன்மொழி கூறித் தேற்றி விடை பெற்றுக்கொண்டு மற்றைத் தலங்களை வணங்கச் சென்ருர்.

---

○ இந்தக் கலியுகத்தில் தேடிவ ரும் பக்தர்களின் தீராதவினை யெல்லாம் தீர்த்து வைக்கும் பாண்டுரங்கன் திருக்கோயில் கொண்டுள்ள திவ்ய ஸ்தலம் பண்டரீபுரம். சக்திஸ்வரு பிணி ஸ்ரீ ரகுமாயி தேவிய வள் எழில் கோலம் கொண்டு அருகினில்நிற்க இடுப்பினிலே கரம் வைத்து அருள் புரியத் தயாராக இருக்கும் பாண்டு ரங்கன் தரிசனம் பக்தர்களுக் கெல்லாம் திகட்டாத விருந்து.

● அட்சத்தையால் விஷ்ணுவை யும், துளசியால் விநாயகரை யும், அருகினல் தேவியையும், வில்வத்தினல் சூரியனையும், ஊமத்தம்பூவினலும், எருக் கம்பூவினலும் விஷ்ணுவை யும் முறையே பூஜிக்கக் கூடாது.

---

சிவனேசச் செட்டியார் தம் புவல்வியாரை வேறுயாருக்குந் திருமணஞ் செய்து கொடாமல், கன்னிமாடத்திலேயே இருக்கச் செய்தார். பூம்பாவையார் சிவ பிரான் திருத் தொண்டில் ஈடு பட்டுச் சிவத் தியானத்தோடி ருந்து, பிறகு சிவபதவி அடைந் தார்.

●

# பழனி திருவாவினன்குடி.

எஸ்.பி. ராமநாதன் செட்டியார் பழனி.

திருமுருகாற்றுப் படையில் மூன்ருவது படை வீடாக நக்கீரரால் பாடப்பட்டிருக்கும் திருவாவினன் குடி பழநியின் ஆதிஸ்தலம்.

நக்கீரர் காலம் கடைச் சங்க காலமாகும். அதாவது இரண்டாவது வருடம் இருக்கலாம் என்று அறிஞர்கள் கூறுவர். அதற்குமுன்பே இருந்த இந்தப் புராதான ஸ்தலம் பல மன்னர்களாலும், பாண்டியர், சேரர், கொங்கு நாட்டு மன்னர்களாலும், பிறகு ஜமீன்தாரர்களாலும் பராமரித்து வரப்பட்டது.

நூருண்டுகளுக்கு முன் கோவில் மிகவும் மோசமான நிலையில் இருந்து வந்தது. வையாபுரிக் குளம் பெருகினுல் தண்ணீர் கோவிலுக்குள் வந்து தரிசிப்பதற்கே சங்கடமான நிலையிலிருந்தது. அப்பொழுது அந்த மூர்த்திக்காக பசுமடம் வைத்து நடத்தய எங்கள் முன்னுேர்கள் கோவிலின் திருப்பணியை நடத்தத் தொடங்கினுர்கள். முன்இருந்த மட்டத்திலிருந்து இருபது அடி வரை தளத்தை உயர்த்தி புதிய கோயிலேகர்ப்பகிரகம்அர்த்த மண்டபம் வகையரு உயர்ந்த சுதை வேலேகள் நிரம்பிய கல் திருப்பணியாகக் கட்டி முடித்து (சாதாரணவருடம் ஆனி மாதம் 13உ) 28—7—1910 வருடத்தில் அப்பொழுது இருந்த என் தகப்பனுர் காரைக்குடி நா. மு. சுப. ராம. சுப்பிரமணியம் செட்டியாரால் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது.

1953-ம் வருடம் மார்ச் மாதம் மறுபடியும் தொடங்கப்பட்ட இந்தத் திருப்பணி பூர்த்தியாகி விட்டது. 1968 ஜுலே மாதம் 5-உ கும்பாபிஷேகம் நடந்தது.

கயிலேயில் உள்ள முக்கண் முதல்வருடன்சினந்து பாலமுருகன், பல மண்டலங்கள் நிறைந்த உலகைச் சுற்றிவந்த கோலத்தில்-அதாவது மயில் மீது உலகம் போன்ற ஒரு உருண்டை பீடத்தில்-வேலாயுதத்துடன் அமர்ந்து காட்சி அளிக்கிருர். இத்தலத்தில் திரு (மகாலக்ஷ்மி),(காமதேனு), இனன், (சூரியன்), கு (பூமிதேவி), டி (அக்னி) தேவதைகள் தினமும் பாலமுருகனே வழிபடுவதாகச் சொல்கிருர்கள். அதற்கு அறிகுறியாகஇந்த ஐந்துதேவதைகளுக்கும் விக்கிரங்

கள் பிரகாரத்தில் தென் மேற்கிலிருக்கிறது. இந்த மூர்த்திதோற்றத்தில் சிறியதானாலும், கீர்த்தியில் மிகப் பெரியது என்பது அனுபவ பூர்வமாகக் கண்ட உண்மை.

அருணகிரிநாதர் திருப்புகழில் ஆவினன்குடி பெருமான் என்றும், ஜபமாலை தந்த சற்குருநாதன்என்றும் போற்றுகிறார். இந்த மூர்த்தியைக் குழந்தை வேலாயுதர் என்று சொல்லுவர்.

கேரள மக்கள் இம்மூர்த்தியை அதிகம் வழிபட்டு வந்தார்கள் என்றும், வேலாயுதன் என்று கேரள மக்களில் பெயர் வைப்பதும் இந்த மூர்த்தியின் நினைவாகத் தான் என்றும் சொல்லப்படுகிறது. திரு ஆனன்குடி என்று தனி ஊராக விளங்கிய இத்தலம் பழனி என்ற பெயர் ஓங்கி வளருவதால் அநேகருக்குத் தெரிவதில்லை; திருப்புகழ் படிப்பவருக்கும் திருமுருகாற்றுப்படை படிப்பவர்களுக்குத்தான் தெரியும். மற்றவர்களுக்கு எடுத்துச் சொன்னால் தான் தெரிகிறது.

இனிமேல் கம்பீரமாக நிற்கும் ராஜகோபுரம் கொண்ட புதிய கோயிலை யாரும் பார்க்காமலிருக்க முடியாது; சொல்லாமலேயே தெரிந்து கொள்வார்கள். முன்பெல்லாம் காவடி எடுப்பவர் திருவாவினன்குடியிலும் காவடிக்குப்பூஜை செய்து விட்டுத் தான் மலைக்கு காவடிஎடுத்துக் கொண்டு போவார்கள். அந்தப் பழக்கம் மறுபடியும் ஆரம்பித்து நடந்து வருகிறது.

---

# காந்திஜியின் பொன் மொழிகள்

ஒரு தேச மக்களின் இதயத்தை மற்றொரு தேசத்து மக்கள் காண முடியாதவாறு அரசாங்க இயந்திரங்கள் குறுக்கே நிற்கின்றன.

தேசங்கள் பரஸ்பரம் ஒன்றை ஒன்று சுரண்டுவதை நிறுத்தினாலொழிய உண்மையான ஆயுத ஒழிப்பு நடைபெறாது.

வல்லரசுகள் ஆயுத ஒழிப்புச் செய்ய தைரியமாக முன் வந்தாலொழிய சமாதானம் கிட்டப் போவதில்லை.

கோடிக் கணக்கான மக்களுடன் பேசும் சக்தி கொண்ட கலையையும் இலக்கியத்தையுமே நான் விரும்புகிறேன்.

சந்ததிவிருத்தியைதேவையான அளவுக்குக் கட்டுப்படுத்த சுய கட்டுப்பாடு (புலனடக்கம்) ஒன்று தான் சரியான மார்க்கம்.

பிரத்தியேக அந்தஸ்தையும் சலுகையையும் நான் வெறுக்கிறேன்.

உழைக்காமல் இருப்பவனுக்கு உண்பதற்கு மட்டும் என்ன உரிமை இருக்கிறது.

# ஞானசாதனம்

## அன்னை ஸ்ரீ ஸாரதாதேவி

ஞான சாதனம் என்பது ஆண்டவனுடைய தாமரைப் பாதங்களில் மனத்தினை நிறுத்தி அவன் நினைவிலேயே மூழ்கிக்கிடப்பதாகும்.

ஞான சாதனங்களைத் தனிமையான இடத்தில் பழகுவது மிக அவசியமாகும். செடி சிறியதாக இருக்கும்போது வேலி மிக அவசியம். அது பெரியதாகிவிட்டால் கால்நடைகள் அதற்கு எவ்விதத் தீங்கும் செய்ய முடியாது. அதுபோல் சில காலம் தியானத்தில் ஆழ்ந்து மனம் நிலைத்த பிறகு நீ எங்கு வேண்டுமானாலும் தங்கி யாருடன் வேண்டுமானாலும் பழகலாம். உன் மனம் அதனால் பாதிக்கப்படாது.

எதனையேனும் பற்றி அறிந்து கொள்ளவேண்டும் என்ற விருப்பம் எழுமேயானால், தனியான இடத்தில் தங்கிக் கண்ணீர் மல்க ஆண்டவனையே வேண்டுக. அவன் உன் மனத்திலுள்ள அழுக்கையும் துயரத்தையும் போக்குவான். பின்பு உனக்கு எல்லாவற்றையும் விளங்கும்படி செய்வான்.

நித்திய அநித்தியப் பொருள்களைப்பற்றிஎப்போதும்விசாரணை செய். உன் மனதைக் கவருகின்ற புறப்பொருள்கள் எல்லாம் அழியும் தன்மையுடையன என்பதை அறிய முயல்க; உன் கவனத்தை ஆண்டவனிடம் திருப்புக.

எப்போதும் ஆண்டவனுக்குரிய பணிகளையே செய்யவும், அதே சமயம் ஜபமும் தியானமும் செய்யவும் முயல்க. அவ்வாறு செய்தால் உன் மனம் தீய நினைவுகளால் பாதிக்கப்படாது. செயல் புரியாது தனியே அமர்ந்திருந்தால் எல்லா வகையான எண்ணங்களும் தோன்றி மனவமைதியைக் கெடுத்து விடும்.

இந்தமனிதப்பிறவிபெற்றதால் நீ பாக்கியவான். உன்னால் முடியுமளவுக்கு ஆண்டவனைத் துதி செய். நீ கஷ்டப்பட்டு உழைக்க வேண்டும். உழைக்காமல் எதையும் அடைவது முடியாது. உலகச் செயல்களில் ஈடுபட்டிருந்தாலும் தினந்தோறும் பிரார்த்தனைக்கும் ஞான சாதனங்கட்கும் ஒரு சிறிது நேரத்தையாவது ஒதுக்க வேண்டும்.

---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனாதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. கா.சி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17